“ நீங்கள் ரோம் நகருக்குப் போகத் தேவையில்லை எஸ்.ஆர்.எம் எக்ஸ்போர்ட் க்வாலிடி உடுப்புத் துணிகளைப் பெற. ”




# எக்ஸ்போர்ட் க்வாலிட்டி எஸ் ஆர் எம் துணிகள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன இப்போது.

வெளிநாட்டுத் தரமுள்ள எஸ்.ஆர்.எம் உடுப்புத் துணிகள். பூக் கோலங்கள், விதவித வடிவுகள், சம்பிரதாய ரகங்கள். இயல்பான சாயல்களிலும், வேறுபட்ட வர்ணங்களிலும் வருபவை. 50-50 பாலியெஸ்டர்-பருத்திக் கலப்பிலிருந்து தயாரிப்பு. தவிர, தூய பருத்தி: பாப்லின், கேம்ப்ரிக். உலகத் தரம் வாய்ந்தவை.

கிடைக்குமிடம்: உங்களூர் எஸ்.ஆர்.எம் ஸ்டாக்கிஸ்டு.

## ஸ்ரீ ராம் மில்ஸ் லிட்,

கண்பத்ராவ் கதம் மார்க், வொர்லி,
பம்பாய் 400 013

Creative Unit-A 1193

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர் –

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம். பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

பிறந்த நாளைய மிஞ்சும் மென்மையோடு
உங்கள் மேனி மிளிரப் பேருதவி

Johnson & Johnson*




* Trade Mark


லின்டாஸ்-J&J. 4-140 TM





## போர்ஹென்ஸால் பல் துலக்கவும் அவளுக்குக் கற்பியுங்கள்.

### தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக்கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத்துகள்களை அகற்றுவது.




உங்கள் குழந்தைக்கு போர்ஹென்ஸ் பழக்கத்தைக் கற்பியுங்கள். அதாவது, பல் வைத்திய ரொருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹென்ஸ் பற்பசை கொண்டு, போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் ஜூனியர் டூத் பிரஷ்ஷால் தவறாமல் பல் துலக்கவும் ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கவும் பழக்கப்படுத்துங்கள்.

### போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.

**போர்ஹென்ஸ்**

பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம். இப் புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை "மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1" என்னும் முகவரிக்கு அனுப்புக. K-6

பெயர் ______________ வயது ______

முகவரி ______________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

130F-182

கல்கி

## இந்த இதழில்...





ஆனந்த, ஆனி 2
ஜூன் 16, 1974

★

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
| --- | --- | --- |
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 — இதழ் 46

# அரசியல் சுத்திகரிப்பு இயக்கம்!

நீர்மசீலரும் அடக்கத்தின் திருவுருவும், காந்தியச் செம்மலும் சர்வோதயத் தலைவருமான ஜெயப்பிரகாசருக்கு ஒரு சஸ்திர சிகிச்சை தேவைப்பட்டது.

தர்மம் தழைத்து, வீரம் மலிந்து, செல்வம் செழித்து, இயற்கை வளம் கொழித்த நமது பாரத தேசத்துக்கும் இப்போது ஒரு கடுமையான சிகிச்சை தேவைப்படுகிறது!

ஜெயப்பிரகாசருக்கு ஏற்பட்டது உடலில் ஒரு சிறு உபாதை. நாட்டுக்கு ஏற்பட்டுள்ளதோ அதன் ஆன்மாவையே பீடித்துள்ள பயங்கர நோய்.

வேலூரில் கிறிஸ்துவ மருத்துவப் பணிமனையில் சிகிச்சை பெற்று உடல் நலம்பெற்றுள்ள ஜெயப்பிரகாசர், நாட்டின் ஆன்மாவைக் குணப்படுத்தும் பெரும் பொறுப்பைத் தாமே வலிய ஏற்றுள்ளார்.

காந்தியம் பேசி, விநோபாவின் அடிச்சுவட்டில் நடந்து, சர்வோதயப் பணி, பூதானப் பணி, கொள்ளைக்காரர் மனமாற்றம் என்றெல்லாம் புனிதமானதும் மனத்துக்குகந்ததுமான காரியங்களில் ஈடுபட்டிருந்தவர், துர்நாற்றம் மிகுந்த அரசியலில் புகத் தீர்மானித்தபோது, எத்தனை மனவேதனை அடைந்திருப்பார் என்று யாரும் எளிதில் ஊகிக்கலாம். ஆனால் தமது சொந்த மனத் திருப்தியை விட நாட்டு நலனையே முக்கியமாகக் கருதி, உடல் தளர்ந்த நிலையிலும் தளராத உள்ளத்துடன் அவர் அரசியல் சாக்கடையைச் சுத்தப்படுத்த முனைந்திருக்கிறார்.

சிலரின் பணி தேவைப்படும் அளவுக்கு இங்கு அரசியல் சீரழிந்தது நமது நாட்டின் துரதிர்ஷ்டம்.

லஞ்ச ஊழல் மடிய வேண்டும், விலைவாசிகள் குறைய வேண்டும், வேலை வாய்ப்புக்கள் பெருக வேண்டும், ஜனநாயகம் தழைக்க வேண்டும், தேர்தல் முறைகள் சீர்ப்படுத்தப்பட வேண்டும் என்பன அவர் நோக்கங்கள்.

பீஹாரில் அவரது பணி முதலில் ஆரம்பமாகிக் கிளர்ச்சி நடக்கிறது. சுதந்திர இந்தியா கண்டும் கேட்டுமிராத அளவில் மாபெரும் இயக்கம் மிக அமைதியாக நடந்தேறியது.

'சட்டசபைப் பிரதிநிதிகள் எங்கள் நம்பிக்கையை இழந்து விட்டனர். அவர்கள் ராஜிநாமா செய்ய வேண்டும்' என்பதாக ஐம்பது லட்சம் வாக்காளர்கள் மகஜரில் கையெழுத்திட்டு அவை கற்றை கற்றையாக, வண்டி வண்டியாக ஊர்வலம் வந்தன.

ராஜ்ய அரசிடம் மக்களுக்கு உள்ள அதிருப்தியுடன் ஜெயப்பிரகாசரிடம் அவர்களுக்குள்ள மதிப்பையும் நம்பிக்கையையும் ஊர்வலம் உணர்த்துகிறது.

ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபை அங்கத்தினர் அடுத்த தேர்தல்வரை எம். எல். ஏ.தான். அவரை வாக்காளர் திரும்ப அழைக்க வழியில்லை நமது அரசியல் சட்டத்தில். ராஜிநாமாச் செய்யுமாறு மக்கள் வற்புறுத்தினாலோ அதையும் முப்பத்துமூன்றாவது சட்டத் திருத்தத்தின்படி செல்லாததாக்கி விடலாம் மத்திய அரசு. இந்நிலையில் கிளர்ச்சி தவிர வேறு வழியில்லை என ஜெயப்பிரகாசர் நினைத்திருக்கலாம்.

'அவர் விருப்பம் நிறைவேறிச் சட்ட சபை கலைக்கப்படுவதாகவே கொண்டால், பிறகு என்ன? ஜனநாயக ஆட்சியைக் கவிழ்த்து விட்டு ராஷ்டிரபதி ஆட்சியைக் கொண்டு வருவதில் என்ன லாபம்?' என்று சிலர் கேட்கிறார்கள். 'மாற்றுத் திட்டம் என்ன?' என்று வினவுகிறார்கள்.

ஜெயப்பிரகாசரின் அடிப்படை நோக்கங்களில் யாருக்கும் சந்தேகம் இருக்கவே முடியாது. ஆயின் அந்த நோக்கங்களை நிறைவேற்ற அவர் மேற்கொண்டுள்ள செயல் முறைகள் குறித்து விநோபா அடிகளுக்குக்கூட ஐயப்பாடுகள் இருப்பதாகப் பத்திரிகைகள் பேசுகின்றன.

தலைவர்கள் இருவரும் விரைவில் சந்திக்கப் போகிறார்கள். இந்தச் சந்திப்பு நாட்டுக்கும் ஜனநாயகத்துக்கும் பயன் தருவதாக அமையட்டும்.

ஜெயப்பிரகாசரின் முயற்சியால் பீஹாரில் மட்டுமின்றித் தேசம் முழுவதிலும் ஓர் அரசியல் சுத்திகரிப்பு இயக்கம் ஜனநாயகக் கோட்பாடுகளுக்கு உட்பட்ட முறையில் பரவட்டும்.




## ஊனமுற்றோருக்கு உதவி

முதல்வர் திரு கருணாநிதி அவர்களின் ஐம்பதாவது வயது நிறைவுற்ற பொன்விழாவினையொட்டி ஊனமுற்றோருக்கு உதவித் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. நல்ல காரியத்தை அகமும் முகமும் மலர வரவேற்கிறோம். முதல்வரின் பிறந்த நாளையொட்டி அவருக்கும் வாழ்த்துத் தெரிவிக்கிறோம். இந்தத் திட்டத்துக்கு உதவியவர்கள் அனைவரையும் குறிப்பாக, ரூ. 50,000 வழங்கிய பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம் அவர்களையும் ரூ. 25,000 வழங்கிய திரு பி. நாகிரெட்டி அவர்களையும் போற்றுகிறோம்.

'உடலில் ஊனம் உள்ளத்தில் ஊக்கம்' என்ற தலைப்பில் கல்கியில் பல கட்டுரைகள் வெளிவந்ததை நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அதிலிருந்து ஊனமுற்றோர் அனுதாபத்தைக் கோரவில்லை என்பது நிதர்சனமாகத் தெரிந்தது. அவர்கள் ஊனத்தைப் பொருட்படுத்தாமல் உழைத்துச் சம்பாதிக்கவும் தலை நிமிர்ந்து வாழவுமே விரும்புகிறார்கள். அவர்கள் செய்யக்கூடிய வேலைவாய்ப்புக்கள் பெருக வேண்டும் என்பதே கோரிக்கை. முதல்வரின் திட்டத்தில் இந்த அம்சத்துக்கு முக்கியத்துவம் தரப்பட்டிருப்பது கண்டு மகிழ்கிறோம்.

திட்டத்துக்கு யாரையும் வற்புறுத்தியோ அதிகாரிகளைக் கொண்டு மிரட்டியோ பணம் பெறாமல் இருத்தல் நலம்.

திட்டம் குறைகூற இடமில்லாத வகையில் இனிதே நிறைவேறட்டும்.

## அரசியல் தர்மம்

முனிபுங்கவரின் ஜயந்தித் திருநாளில் பங்குபற்ற சென்னைக்கு வந்த உபராஷ்டிரபதி திரு பதக், ராஜரிஷியின் உருவப் படத்தைத் திறந்து வைத்தும் பேசியிருக்கிறார்.

ராஜாஜி அரசியலையும் தார்மிகப் பண்புடன் அணுகினார் என்று திரு பதக் குறிப்பிட்டார். இதைவிட ஒரு படி மேலே போய், தார்மிகத்துக்குப் புறம்பான அரசியலை அராஜகமாகக் கருதி வெறுத்தார் ராஜாஜி என்று கூடச் சொல்லலாம்.

எது தர்மம் என்பதைப் புரிந்து கொண்டு நடப்பது பலருக்குக் கடினமாக இருக்கலாம் என்பதாம். அதற்கு ஒரு வழிமுறையும் உபதேசித்தார் அவர். இறைவனிடம் பக்தி செலுத்துவது எளிது. அதைச் செய்யுங்கள், ஆண்டவன் வழி காட்டுவான், மனம் தெளிவு பெறும் என்றார்.

நம்முடைய விருப்பு வெறுப்புக்களையும் கோப தாபங்களையும் ஒதுக்கிவிட்டு ஆண்டவனுக்குப் பிரீதியான காரியமா இது என்று யோசித்தால் போதும், தர்மம் தழைக்கும் என்பார் காஞ்சி முனிவரும்.

## அமைதிப் பணியில் அசகாய சூரர்

நீண்ட மூக்கும் அலை அலையான கேசமும் குறும்புக் கண்களும் மந்தகாசப் புன்னகையும் மற்றொரு மாபெரும் வெற்றியைப் பெற்றுள்ளன. சிங்கத்தின் குகைக்குள்ளே புகுந்து பிடரியை உலுக்குவது போல் யூதராயிருந்து கொண்டும் அராபியத் தலைநகரங்களில் கிஸ்ஸிஞ்சர் சாதிப்பவை மலைக்க வைப்பவை. இஸ்ரேல் எகிப்திய யுத்தம் முடிந்து, சமாதான ஒப்பந்தம் கையெழுத்தான சிறிது காலத்துக்குள் இஸ்ரேல் — சிரியா ஒப்பந்தமும் கையெழுத்தாகியுள்ளது. மேற்கு ஆசியாவில் மட்டுமென்ன, கிஸ்ஸிஞ்சர் தாம் போகும் இடங்களிலெல்லாம் உலக அமைதிக்கு வலுவான அஸ்திவாரமிட்டு வருகிறார்.



இவரை வெளிவிவகாரக் காரியதரிசியாகப் பெற்றது அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸனின் அதிர்ஷ்டம். வாட்டர்கேட் விவகாரத்தில் ஜனாதிபதியின் புகழ் வெகுவாகக் குறைந்த போதிலும் அமெரிக்க மக்களில் பலர், 'அது கிடக்கட்டும். நம்து இளைஞர்களை வியட்நாமிலிருந்து நிக்ஸன் அழைத்து வரவில்லையா, ருஷ்யாவுடனும் சீனாவுடனும் நட்புறவுக்கு வழி வகுத்து, வர்த்தகம் பெருக்க வில்லையா' என்றெல்லாம் கேட்கிறார்கள் என்றால் அதற்குக் கிஸ்ஸிஞ்சர் தானே பெருமளவு காரணம்!

கிஸ்ஸிஞ்சர் அடுத்த மாதம் ருஷ்யா செல்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அமைதிப் பணியில் ஈடுபட்டுள்ள அசகாய சூரருக்கு நல் வாழ்த்துக் கூறுவோம்.

## ஜனாதிபதி தேர்தல்

குஜராத், புதுவைச் சட்டசபைகள் கலைக்கப்பட்டிருப்பதால், மறுதேர்தல் நடைபெற்று அங்கத்தினர்கள் பதவி ஏற்கும் வரையில் ஜனாதிபதி தேர்தலைத் தள்ளிப் போட வேண்டியதில்லை என்று ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பு அளித்துள்ளது.

தன்னிடம் விடப்பட்ட பிரச்னைகளுக்கு ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்ததில் தவறில்லை எனினும் பதில் பெறப்படாத கேள்விகள் வேறுபல புதிதாய் எழுகின்றன. சேர்ந்தாற் போல ஐந்து, ஆறு மாநிலங்களில் சட்டசபை, எந்தக்காரணத்தினாலாவது கலைக்கப்பட்டோ,

இயங்காமலோ இருந்தால், ஜனாதிபதி தேர்தல் நடைபெறலாமா? அரசியல் காரணங்களுக்காகச் சட்டசபை கலைக்கப்படாமல், ஆனால் செயல்படாது வைக்கப்பட்டிருந்தால் நிலைமை எப்படி? கலைக்கப்பட்ட சட்டசபைக்கு மறு தேர்தல் நடைபெறுவதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தால், ஜனாதிபதி தேர்தல் நடத்தலாமா? தேர்தலில் வோட்டு அளிக்கும் உரிமை சட்டசபை அங்கத்தினர்களுக்கு மட்டுமே அளிக்கப்பட்டிருப்பதால், சட்டசபையை இயங்காமல் செய்வதன் மூலம், அவர்களுடைய வோட்டுரிமையை வீணாக்கலாமா? இப்படிப் பல. ஜனாதிபதி தேர்தல் இப்போது ஆகஸ்டு 24ந் தேதிக்குள் ஜாம் ஜாம் என்று நடக்கும். புதுக் காங்கிரஸ் பல மாநில சட்டசபைகளிலும் மத்திய சபைகளிலும் மெஜாரிட்டி பலம் பெற்றுள்ளதால், அதற்கு இசைவான அபேட்சகரை நிறுத்தவும் அவருடைய வெற்றிக்கு வகை செய்யவும் இனி தடை ஒன்றும் இல்லை!

## உலக அரங்கில் சைவமும் தமிழும்

நல்ல காரியங்களுக்கு உதவுவதற்கென்றே இவர் ஏராளமாய்ச் சம்பாதிக்கிறார் என்று பலரும் பொறாமைப்படும்விதமாக நடந்து கொள்கிறவர் பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம்.



குறிப்பாக அறக் கட்டளைகள் மூலம் அரிய நூல்கள் எழுதவும் அச்சாகவும் நிரம்ப உதவியிருக்கிறார்.

ஏற்கனவே திருக்குறளையும் திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ள திருவாசகமணி திரு கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களைத் தற்போது பெரிய புராணத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் வேலையில் ஈடுபடுத்தியுள்ளார் திரு மகாலிங்கம்.

மூவாயிரம் செய்யுட்களைக் கவிதை ரூபத்திலேயே ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பணி ஆரம்பமாகிக் கால்வாசி வேலை முடிந்திருக்கிறது.

மீதமுள்ள பகுதியும் விரைவில் எழுதி முடிக்கப்பட்டுத் தமிழும் சைவமும் உலக அரங்கில் ஏற்றம் பெறுவதாக!

## அத்தியாவசியப் பணி

அரசுத் துறையில் இருந்தும் லாபகரமாக நடக்கிற ஸ்தாபனங்களுள் முதன்மையானது என்ற அளவில் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் பெரும் புகழ் பெற்றுள்ளது. நிர்வாகத் திறனுடன் செயல் திறனும் மிகுந்திருப்பதால் இங்கு தயாராகும் கனரக மின் உபகரணங்கள் உலக அரங்கிலேகூட நற்பெயர் எடுத்துள்ளன.



நாட்டின் மின்சாரத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் அத்தியாவசியப் பணியை முன்விட்டு பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் விரிவடைந்து சென்னையிலும் தற்போது ஒரு பிரிவு தொடங்கியுள்ளது. இதன் பொது நிர்வாகியாக திரு ப. வி. கே. அச்சன் பொறுப்பேற்கிறார். கனரக மின் உபகரணங்களை வழங்குவதுடன் மின்நிலையங்களை நிறுவுவதிலும் இந்தப் பிரிவு ஈடுபடும். இது வரை பி.எச்.ஈ.எல். பெற்று வந்துள்ள நற்பெயரை இந்தப் பிரிவும் கறுகறுப்புடன் இயங்கிக் காத்துத் தருமாறு வாழ்த்தி வரவேற்போம்.

ராஜாஜி சிந்தனை

### அணு வெடிச் சோதனைகள்!

''சிறியதோ, பெரியதோ, எல்லா அணு வெடிச் சோதனைகளையும் நாம் எதிர்க்கிறோம்! பூமி மட்டத்துக்கு மேலோ, அல்லது கீழோ எப்படியானாலும் சரி, நாம் எதிர்க்கிறோம்!'' என்று இந்தியாவின் தலைமையில் பெல்கிரேட் சக்திகள் (கூட்டுச் சேரா நாடுகள்) கூறியுள்ளன.

அணு ரகசியத்தை அறிந்துள்ள வல்லரசுகள், கடவுளுக்கு எதிரான சைத்தானைப் போன்ற ஓர் ஆற்றலை அந்த ரகசியத்தின் அடிப்படையில் பெற்றுள்ளன. உலகை அழிக்கவோ அல்லது கோடானு கோடி ஆண்டுகளாக உலகில் தோன்றி வந்துள்ள சாதனைகளை அழிக்கவோ, மனிதனோ அல்லது கடவுளோ இயற்றியுள்ள எந்தச் சட்டமும் வல்லரசுகளுக்கு அனுமதி தரவில்லை.

மனித குலத்தைப் பணயம் வைத்து நடக்கும் இந்தக் கொடூரப் போட்டி கண்டிப்பாக நிறுத்தப்பட வேண்டும்.

நவம்பர் 18, 1961 சுயராஜ்யா

# வியப்பு ஏதுமில்லை!!!

காஞ்சியை நினைத்தால் காமாட்சியும்
காசியை நினைத்தால் விசாலாட்சியும்
மதுரையை நினைத்தால் மீனாட்சியும்
அழகிய அசல் பட்டுப் புடவைகளை
நினைத்தால் சாரதா'ஸும் நினைவிற்கு
வருவதில் வியப்பு ஏதுமில்லை!!!

சாரதாஸின் பட்டுப் புடவைகளை
அணிந்து
லட்சுமிகரமாக
விளங்குங்கள்.

# சாரதாஸ்

பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான இடம்

தன் பில்டிங், மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 87177

32, N.S.B. ரோடு, திருச்சி-2. போன்: 7077

"பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்..."



# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!




பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக் கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய் நாற்றம் - மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி நவீன பராமரிப்பு முறையில், உங்கள் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது; மற்றும் வாய் நாற்றத்தையும் உடனே நிறுத்துகிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக் கணக்கில் வரும்!**



...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP.G.21 TM

# அம்பாளிருக்க அகம்பாவம் ஏன்?




ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**'ஸௌ**ந்தர்ய லஹரி' போல் ஒரு கிரந்தத்தைச் செய்கிறவருக்கு எத்தனை அகம்பாவம் வேண்டுமானாலும் உண்டாகிவிடலாம். பூலோகம் ஏற்பட்ட நாளாக இதற்கு முந்தியோ பிந்தியோ இவ்வளவு பூரணமான ஸௌந்தரியம் உள்ள வாக்கு தோன்றியதும் இல்லை, இனி தோன்றப் போவதும் இல்லை என்று சொல்லும்படி, எத்தனை முறை கேட்டாலும் அலுக்காத அழகு வாய்ந்ததாக இருப்பது 'ஸௌந்தர்ய லஹரி'. இப்படிப்பட்ட உத்தம கிரந்தத்தைச் செய்த ஸ்ரீ சங்கராசாரியர்களுக்கோ தாம் அதைப் பண்ணினோம் என்ற அகங்காரம் எள்ளளவும் ஏற்படவில்லை. ஸ்தோத்திரத்தைப் பூர்த்தி செய்து அம்பாளின் சரண கமலத்தில் அர்ப்பணம் பண்ணுகிற நூறாவது சுலோகத்தில் மிகவும் விநயமாகச் சொல்கிறார்: (''ப்ரதீப ஜ்வாலாபி:'' என்று தொடங்கும் சுலோகம்.)

''அம்மா, வாக் ஸ்வரூபிணியான உன்னை வாக்கினால் துதிக்கிறேனே, இது எப்படி இருக்கிறது? சூரியனுக்குக் கற்பூர ஹாரத்தி காட்டுகிற மாதிரிதான் இருக்கிறது'' என்று ஆரம்பிக்கிறார். சூரிய தேஜஸ் எங்கே, கர்ப்பூரத்தின் அற்ப ஒளி எங்கே? சூரியனால்தான் கர்ப்பூரத்துக்கு எரிகிற சக்தியே உண்டாகிறது. நாலு நாள் வெய்யிலில் அடிக்கவிட்டால் கர்ப்பூரம் இலேசில் பிடித்துக்கொள்வதில்லை. சங்க்ராந்தியன்று சூரிய பூஜை செய்து, அந்தத் தேஜோமயத்துக்குக் கர்ப்பூரம் காட்டுகிறோம். அதனால் சூரியனையா விளக்கிக் காட்டுகிறோம்? சூரிய ஒளியில் கர்ப்பூரத்தின் சுபாவமான பிரகாசம்கூடத் தெரியாமல் அது மங்கிப் போவதைத்தான் பார்க்கிறோம். அம்பாளை வாக்கால் வர்ணிக்கப் பார்ப்பது இப்படிப்பட்ட காரியம்தான்.

இன்னோர் உதாரணம் சொல்கிறார்: ''சந்திர காந்தக் கல் சந்திரனுக்கு அர்க்கிய ஜலம் விடுகிற மாதிரி உன்னை இந்த வாக்கால் துதிக்கிறேன்.'' சந்திர காந்தக் கல் என்பது பூர்ணிமை சந்திரன் . உதிக்கிற சமயத்தில் அந்த நிலவை உள்ளே வாங்கிக் கொண்டு ஜலமாகக் கக்கும் என்பார்கள். வாஸ்தவத்தில் இப்படி ஒன்று உண்டோ இல்லையோ கவிகள் ஒரு சம்பிரதாயமாக (tradition) இதைப் பற்றிச் சொல்லி வருகிறார்கள். இப்படிப்பட்ட சந்திரகாந்தக் கல் சந்திரனைப் பூஜை செய்கிறேன் என்று ஆரம்பித்து, பதினாறு உபசாரங்களில் ஒன்றாக 'அர்க்கியம்' என்று நீர் வார்க்கிறபோது, நிலவின் சக்தியிலேயே பிறந்த தன் ஜலத்தை வடித்தால் எப்படி இருக்கும்? அம்பாளின் அநுக்கிரகமே தமக்குள் பிரவேசித்து இந்த வாக்கை வடித்திருக்கிறது என்று ஆசார்யாள் சொல்லாமல் சொல்கிறார்கள்.

மூன்றாவதாக இன்னொரு திருஷ்டாந்தம். ''சமுத்திரத்துக்கு அதன் தீர்த்தத்தையே எடுத்து ஸ்நானம் செய்விக்கிற மாதிரி உன்னை இந்த ஸ்துதியால் பூஜிக்கிறேன்'' என்கிறார். ராமேசுவரத்துக்குப் போனால் சேதுவில் சமுத்திர பூஜை செய்வார்கள். அப்போது பூஜா அங்கமாக சமுத்திரத்துக்கு அபிஷேகம் பண்ணுவார்கள் — அந்தப் பெரிய சமுத்திரத்திலிருந்தே துளிப்போல எடுத்து அதற்கே ஸ்நானம் செய்விப்பார்கள். வாக் சமுத்திரமாக இருக்கிற அம்பிகைக்கு அதிலிருந்தே கொஞ்சத்தை எடுத்துத் துதி செய்வதாக ஆசாரியாள் சொல்கிறார். அந்த ஜலம் பூஜை செய்கிறவருக்கா சொந்தம்? சமுத்திரத்துக்கே சொந்தமானதை எடுத்து அதற்கே மீண்டும் தருகிறாராம்.

அவள் கொடுத்த வாக்காலேயே அவளைத் துதிக்கிறோமே ஒழிய இதில் தாமாகச் செய்தது எதுவுமே இல்லை என்று அடக்கத்துடன் சாக்ஷாத் ஈசுவராவதாரமான ஆசார்யாள் சொல்கிறார். 'சந்திரன் இல்லாவிடில் எப்படி சந்திரகாந்தக் கல் ஜலம் வடிக்காதோ அப்படி அவளருளின்றி இந்த வாக்கில்லை. பெரிய சமுத்திரத்திலிருந்து கையளவு ஜலம் எடுக்கிற மாதிரி வாக்கு சாகரத்திலிருந்தே இந்த வாக்கை எடுத்திருக்கிறோம். இதனால் அவள் மகிமையை விளக்கியதாக நினைப்பது, கர்ப்பூரத்தால் சூரியனைக் காட்டிக் கொடுப்பதாக எண்ணுகிற பரிகாசத்துக்குரிய செயல்தான்' என்றெல்லாம் சுலோகத்தின் தாத்பரியம்.

அவதார புருஷர்களும் அம்பாளிடம் இப்படி அடங்கிப் போகிறார்கள். அப்படியிருக்க நமக்கு எதைப் பற்றியும் அகங்காரம் கொள்ள ஏது நியாயம்? நாம் நன்றாக எழுதுகிறோம், பேசுகிறோம் என்று உலகம் புகழ்ந்து மாலை போடுகிற சமயத்தில் நமக்குத் தலைக் கனம் ஏறத்தான் தொடங்கும். அப்போது நமக்குத் தகுதி உண்டா என்று யோசிக்க வேண்டும். எந்த இடத்திலிருந்து நம் சக்தி வந்ததோ, அந்த அம்பாள் இருக்க, புகழுக்குப் பாத்திரராகி அகம்பாவப்பட நமக்குக் கொஞ்சம்கூட உரிமையில்லை என்று உணர வேண்டும். 'நமக்கு அகம்பாவமே இல்லை' என்ற எண்ணம் வந்து அதில் ஒரு பூரிப்பு உண்டாகிவிட்டால், அதுவும் கூட அகம்பாவம்தான். எனவே அகம்பாவம் தலைதூக்க இடமே தராமல் சர்வ ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இப்படியாக நம் புகழை எல்லாம் அம்பாளுக்கு அர்ப்பணம் பண்ணிவிட்டால் நமக்கு ஒரு குறைவுமில்லாமல் மேலும் மேலும் அவள் அநுக்கிரகம் கிடைக்கும்.

# நாகார்ஜுன சாகர்

ஹைதராபாத்தில் வேலை என்ற வுடன் ''போகாதே, போகாதே என் மகனே!'' என்று அம்மா தடுக்க, ''அன்னையே, புறப்படுபவனைத் தடுக் காதே. மொழி புரியாவிட்டாலும் வழி தெரியாதா எனக்கு'' என்று வீரம் பேசிப் புறப்பட்டவன், தமிழ் பேச யாரா வது கிடைக்க மாட்டார்களா என்று ஏங்க ஆரம்பித்தேன். தமிழ்ச் சங்கத்துக் குக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுத்தால் அது என் அதிருஷ்டம்தானே?

ஹைதராபாத் — 32 என்று முகவரி இருந்தாலும், ஹைதராபாதிலிருந்து நான் இருக்குமிடத்துக்கு முப்பத்திரண்டு கிலோமீட்டர் தூரமிருக்கும். இது தெரி யாமல் என்னுடைய மாமா பொண்ணு மாம்பலத்திலிருந்து கொண்டுஒவ்வொரு முறையும் ஹைதராபாத் கல் வளையல் வாங்கியனுப்பென்று இடைவிடாது கடிதங்கள் தீட்டிக் கொண்டிருக்கிறாள். அவளையேதான் நான் மணந்து கொள்ள வேண்டுமென்று அப்பா பிடிவாதம் பிடிக்கிறார். வேறு வினையே வேண்டாம்.

இந்தச் சமயத்தில்தான் நான் அவ ளைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அவள் யாரென்று கேட்கிறீர்களா?

அவள்—என் இதய ராணி—என் நெஞ் சென்னும் மாடத்தில் நினைவென்னும் நூலேணி வழியே ஏறி வந்த வஞ்சிக் கொடி, முல்லை மலர். வீராதி வீர வீர பராக்கிரம சாளுக்கியப் புலிகேசி வென் றுவின் கடைசித் தம்பியும் விழுதிப் புண் வேங்கை என்ற சிறப்புப் பட்டம் பெற்றவனுமாகிய மூன்றும் நரசிம்ம பல்லவனின் மூன்றாவது பேத்தியாகிய சங்கமித்திரைதான் அவள்.

என்ன விழிக்கிறீர்கள்?

அவள் என் போன ஜன்மக் காதலி. அவளை மீண்டும் இந்த ஜன்மத்தில் சந்திப் பேனென்று நான் கனவில்கூட நினைக் காத நேரத்தில் திடீரென்று நாங்கள் இருவரும் சந்தித்தது என் அதிருஷ்டமே அதிருஷ்டம்.

தமிழ்ச் சங்கத்தில் ஜனவரி மாதத் துக்கு என்ன புரோகிராம் கொடுக்கலா மென்று மண்டையை உடைத்துக் கொண் டிருக்கும்பொழுதுதான் அந்த 'ஐடியா' தோன்றியது. இந்த மாதம் 'பிக்னிக்' ஒன்றுக்கு ஏற்பாடு செய்தா லென்ன? உடனேயே இங்கிருந்து நூறு மைல் தொலைவிலிருக்கும் ஆசியா விலேயே மிகப் பெரிய அணையான நாகார்ஜுன ஸாகரைப் பிக்னிக் செண்ட ராகத் தேர்ந்தெடுத்தோம்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை காலையில் குழந்தை குட்டிகளுடன் வந்த தமிழ்ச் சங்க உறுப்பினர்களை அடைத்துக் கொண்டு தனியார் பஸ்ஸொன்றில் பயணமானோம்.



அணையைப் பார்த்து முடித்தவுடன் கிருஷ்ணா நதிக் கரைக்கப்பால் தீவுபோலிருக்கும் இடத்தில் தொல்பொருள் காட்சிசாலை ஒன்று இருப்பதாகவும் அங்கே அற்புதமான பழங்காலச் சிற்பங்களும் கலைப் பொருள்களும் காட்சிக்கு வைக்கப் பட்டிருப்பதாகவும் யாரோ சொல்லவே, நதியைக் கடக்க மோட்டார் படகில் ஏறி அமர்ந்தோம்.

படகு புறப்படுகிற நேரத்தில்தான் அந்தப் பெண் வேகமாக வந்து ஏறினாள். எல்லோருடைய விழிகளும் அவள்மேல் விழுந்து தவழ்கிற மாதிரி அப்படியோர் அழகென்றால் அழகு. சினிமா நடிகை கெட்டாள் போங்கள்!

வேறு எங்கேயுமே உட்கார இடம் இல்லாததால் நேராக என்னருகே வந்து அமர்ந்தாள்.

படகு டீசல் என்ஜினின் பெருத்த ஓசையுடன் புறப்பட்டது. கிருஷ்ணா நதியின் பளிங்கு நீரில் படகு மிதக்க, என் எண்ணங்கள் இனம் புரியாத நினைவுகளில் மூழ்கின.

இவளை நான் எங்கேயோ பார்த்திருக்கிறேனே! எங்கே? எங்கே?

அடுத்த நிமிடம், ''சங்கமித்திரை, நீயா?'' என நான் கூவினேன்.

''பவானந்த அடிகளே, நீங்களா!'' என்று அவள் கூவ இருவரும் திக்பிரமை பிடித்தவாறு நின்று விட்டோம்.

கிருஷ்ணா நதியோ மெல்லக் குறுநகை நகைத்துக் கொண்டு ஓடியது.

அன்று பௌர்ணமி.

விண்ணிலே வெண்ணிலவு தவழ்ந்து விளையாட, மண்ணிலே நகைத்தவாறே 'கிருஷ்ணா' ஓடிக்கொண்டிருந்தாள். பளிங்கு போன்ற நீரோட்டத்தின் மேல் மிதந்து கொண்டிருந்த ஓடமொன்றில் நானும் அவளும் தனியாக இன்பபுரியில் திளைத்துக் கொண்டிருந்தோம்.

''அன்பே, ஆரமுதே! அதோ அந்த வெண்ணிலவு சாட்சியாகச் சொல்கிறேன். இரவெல்லாம் என் இதயத்தில் நீ களிநடம் புரிந்து கொண்டிருக்கிறாய்.''

''பவானந்த அடிகளே! நான்கூடத் தங்களிடம் என் மனத்தைப் பறி கொடுத்து விட்டேன். ஆனால்....''

''ஆனால் என்ன அன்பே?''

''அடிகளே, இப்பொழுது நம் நிலையை நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா? நானோ பல்லவ மன்னனின் பேத்தி. காஞ்சியிலே அரசாளும் என் தாத்தா விழுப்புண் வேங்கை மூன்றும் நரசிம்மப் பல்லவர், சாளுக்கியப் படைகளின் இடைவிடாத் தாக்குதலால் என் கல்வி பாதிக்கப்படுமோவென அஞ்சி, என்னை நானிலம் போற்றும் நாகார்ஜுன அடிகளிடம் ஒப்படைத்திருக்கிறார். தாங்களோ நாகார்ஜுனரின் பரம சிஷ்யர். அவருக்குப் பின் இந்தப் புத்த மடாலயத்தையே தாங்கள்தான் ஏற்று நடத்த வேண்டுமென்று நம்பிக்கை கொண்டிருக்கிறார். இந்த நிலையில் நாம் இருவரும் சந்திப்பது அவருக்குத் தெரிய வந்தால்.....''

'நாகார்ஜுன அடிகள்' என்ற பெயரைக் கேட்டவுடன் சற்று நடுங்கவே செய்தது என் உடல்.

நாகார்ஜுனர் புத்த மதத்தில் சேர்வதற்கு முன்னால், வடக்கே பேரரசர் ஒருவரின் படைத் தளபதியாக இருந்தார் என்றும், புத்த மதத்தைத் தழுவிய பிறகு வடக்கேயிருந்த நாளந்தா பல்கலைக் கழகம் போல, தெற்கேயும் ஒரு கலாசாலையை நிறுவ எண்ணித்தான் இந்த அமைதியான கிருஷ்ணா நதிக் கரையைத் தேர்ந்தெடுத்தார் என்றும் சொல்லிக் கொண்டார்கள். ஆயிரக் கணக்கான இளைஞர்கள் பரத கண்டத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்து இங்கே பயின்று கொண்டிருந்தார்கள்.



சி.ஜே. ஷாஜஹான்

சோழ நாட்டில் கோவில் சிற்பியாக இருந்த என்னை இன்று இவ்வளவு தூரம் ஆளாக்கி, புத்த பகவானின் பெரிய பெரிய சிலைகளையும் ஸ்தூபங்களையும் செய்யும் வேலையை என்னிடம் ஒப்படைத்தது மட்டுமல்லாது, என்னிடம் தனியாகக் கருணையும் காட்டி வந்தார் நாகார்ஜுன அடிகளார். என்னுடைய 'பவழராயன்' என்ற சோழநாட்டுப் பெயரையும் மாற்றிப் 'பவானந்த அடிகள்' என்றும் கூப்பிட ஆரம்பித்தார். ஆனால் என்னதான் காவியுடை தரித்து நின்றாலும், காவிரிக் கரையின் இரத்தமல்லவா என் உடலில் பாய்ந்து கொண்டிருக்கிறது. காதலும் வீரமும் தமிழனின் தனிச் சொத்தல்லவா! சங்கமித்திரை வந்த நாள் முதலாகக் கட்டுண்டு காவலான என் உணர்வுகள் திமிறி உருப்பெற்று இன்று அவள் காதலில் பங்கேற்கும்படி செய்து விட்டன.

நினைவுலகுக்குத் திரும்பிய இருவரின் கண்களில், கரையில் நின்று கொண்டு கோபத்தில் துடிதுடித்த உதடுகளுடன் பல்லைக் கடித்துக் கொண்டிருந்த நாகார்ஜுனரின் பயங்கர முகம் தெரிந்தது.

''அத்தான்...'' என்றவாறே பயந்து அவள் என்னை அணைக்க....

''அவ்வளவுதான், இறங்குங்க'' என்று துணைக் காரியதரிசி சேது மாதவன் சொல்லி விட்டுக் கீழே இறங்க எல்லோரும் ஸ்டீம் போட்டிலிருந்து மணலில் குதித்தார்கள்.

நானோ அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். என்றால் இன்னமும் நம்பவே முடியவில்லை. அவள்தானா இவள்? அப்படியானால் நான்தான் பவழராயனாக இருந்து மாறிய பவானந்த அடிகளா?

அவளுடைய விழிகள் என்னையே சுற்றி வர, நான் அவளையே பின்தொடர்ந்தேன்.

''என்ன செக்ரட்டரி ஸார், பேசாம சாப்பாட்டுக் கடையை முடிச்சுட்டு மியூஸியம் பார்க்கலாமே...?''

''ஓ! தாராளமாய் நீங்க சாப்பிடுங்க. இதோ நான் வந்திடறேன்.''

எல்லோரும் மர நிழலில் அமர்ந்து சாப்பிட ஆரம்பிக்க, நானும் அவளும் மட்டும் மியூஸியத்துள் நுழைந்தோம்.

உள்ளே இருந்த சிற்பங்களைப் பார்த்ததும் என் தலை சுற்ற ஆரம்பித்தது.

இறைவனே! இந்தச் சிற்பங்களெல்லாம் இங்கே எப்படி வந்தன? இவற்றையெல்லாம் நானல்லவா வடித்தேன்? அப்படியானால்... நான்தான்... நான்தான்...

என் முன்னால் நடந்து கொண்டிருந்தவள் ஒரு சிற்பத்தைக் கண்டதும் சட்டென்று நின்று என்னைத் திரும்பிப் பார்த்தாள். அவளுடைய பார்வையில் பீதி நிரம்பி யிருந்தது.

அருகே சென்ற நான் அவள் சுட்டிக் காட்டிய சிற்பத்தைப் பார்த்தேன்.

அங்கே — நாகார்ஜுன அடிகள் நின்று கொண்டிருந்தார்.

கரையில் நின்று கொண்டிருந்த நாகார்ஜுன அடிகளின் கண்களில் தீப்பொறி பறந்து கொண்டிருந்தது.

என்னைக் கட்டி அணைத்த சங்கமித்திரையின் தோளைத் தழுவியவாறே நான் நிமிர்ந்து நின்று அவரை ஏறிட்டு நோக்கினேன்.

I will not blot my copy book

I will not blot my copy book

I will not blot my copy book

# அழகான கையெழுத்துக்கு ஆரம்பம்... அருமையான ஆந்திரப் பிரதேஷ் எழுதும் தாள்.

விசேஷ முறையில் வெளுக்கப் பட்டுத் தயாரிக்கப் பட்டுள்ளது. ஆந்திரப் பிரதேஷ் எழுதும் தாள்... எழுதும் பரப்பு சிறப்பாக இருக்கிறது. மசி ஊறாது... மழமழப்பாகப் பேனா ஓடும் அதன் மீது.

அரிச்சுவடி பயிலும் பிஞ்சுக் கரங்களுக்கெனவே படைக்கப் பட்டது. முதன் முதல் பேனாவில் எழுதும் போது, நீங்கள் உபயோகிப்பது ஆந்திரப் பிரதேஷ் எழுதும் தாளாகவே இருக்கும்.

அது மட்டுமல்ல, கற்றுத் தேர்ந்த எழுத்தாளர் களுக்கும் ஏற்றது இதுவே. ஆரம்ப எழுத்தாளர்கள் முதல் அனுபவம் வாய்ந்த எழுத்தாளர்கள் வரை அனைவருக்கும் சிறந்தது ஆந்திரப் பிரதேஷ் எழுதும் தாளே!



ஆந்திரப் பிரதேஷ் பேப்பர் மில்ஸ்
ரிஜிஸ்டர்டு ஆபீஸ் & மில்ஸ்: ராஜமுந்திரி (ஆ.பி.)
பம்பாய் ஆபீஸ்: ஸ்ரீனிவாஸ் ஹவுஸ்,
ஹஸாரிமால் ஸோமாணி மார்க்.
ஹைதராபாத் ஆபீஸ்: 1-2-33/3 மதுபன்,
ககன்மஹல் ரோடு.

மெஸ்ஸர்ஸ். தாக்கர் & கம்பெனி, ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், ஹெச். சோமாணி மார்க், பம்பாய்-1.
மெஸ்ஸர்ஸ். சஞ்சய் & கம்பெனி, தாஸ் சேம்பர்ஸ், 25, தலால் ஸ்ட்ரீட், பம்பாய்-1.
மெஸ்ஸர்ஸ். பிலாசிட் லிமிடெட், ஷரீலேகா ஹவுஸ், மிண்ட் ரோட், பம்பாய்-1.
மெஸ்ஸர்ஸ். தாக்கர் & கம்பெனி, இண்டஸ்ட்ரி ஹவுஸ், [illegible] சினிமா பின்புறம், ஆஷ்ரம் ரோட், அஹமதாபாத்-9
மெஸ்ஸர்ஸ். பிலாசிட் லிமிடெட், 31, செனிங்கி ரோட், கல்கத்தா-16.
மெஸ்ஸர்ஸ். பிலாசிட் லிமிடெட், 24, லிங்கி செட்டித் தெரு, சென்னை-1.
மெஸ்ஸர்ஸ். சஞ்சய் & கம்பெனி, 90, கந்தர் நகர், புது டெல்லி-11.
மெஸ்ஸர்ஸ். தாக்கர் & கம்பெனி, 4-4-288, இந்தர்பாக், சுல்தான் பஜார், ஹைதராபாத்.
மெஸ்ஸர்ஸ். தாக்கர் & கம்பெனி, ஸ்ரீனிவாஸ நிலயம், ஸ்ரீராம் நகர், ராஜமுந்திரி. (ஆ.பி.)

அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்... அன்பைப்போல
மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி
அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில்
ஆழ்த்தும் அருமையான புது நறுமணம்
கொண்டது. அதுவே வெய்ல் ஆ:ப் லவ்.
ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத்
தாராளமாக மேனியெங்கும் தூவிக்
கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே
பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம்
நீண்ட நேரம் உங்களைத் தழுவி,
உங்களைச் சுற்றிலும் கமகமவென
வீசிக் கொண்டிருக்கும். வெய்ல்
ஆ:ப் லவ் உங்களை அலங்கரிக்-
கட்டும். ஹேலோ மட்டுமே
அளிக்கும் வாசமுள்ள
அன்புத்திரை அது.

ஹேலோ வெய்ல் ஆ:ப்
லவ் டால்க் வாசமுள்ள
அன்புத்திரை...
அன்பைப் போல
மிருதுவானது.

அவளுக்கு உகந்தது
# ஹேலோ
வெய்ல் ஆ:ப் லவ்
டால்க்




HT.G.I.TH (R)

''பவானந்தா! என்ன இதெல்லாம்...''

''அடிகளே, தெரியவில்லையா? எங்கள் நாட்டில் இதற்குப் பெயர் காதல்...''

''சங்கமித்திரை! இந்த அடிமைச் சிற்பியிடமா அரசிளங்குமரியான நீ மனம் பறி கொடுத்தாய். இவனை இன்றே விரட்டிவிடுகிறேன், பார்.....'' என்றார் நாகார்ஜுனர்.

எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவராக வேகமாக ஓடினார் நாகார்ஜுனர். இருவரும் பின்தொடர்ந்தோம்.

வேகமாக ஓடியவர் குன்றின் உச்சியிலிருந்த என்னுடைய கலைக் கூடத்தை நோக்கித் திரும்பியதும்தான் என் உள்ளம் ஏதோ விபரீதம் நடக்கப் போவதை உணரத் தொடங்கியது. கிருஷ்ணா நதியைத் தழுவியவாறு நின்ற குன்றின் உச்சியில்தான் என்னுடைய சித்திர — சிற்ப கலைக்கூடமிருந்தது. புத்த பகவானின் சிறிதும் பெரிதுமான பல் வேறு வடிவங்களைப் பளிங்கிலும் செய்திருந்தேன். சீனத்திலிருந்து வந்த யாத்திரிகர் ஒருவர் கற்றுத் தந்த சிற்ப ரகசியத்தின் பிரகாரம், எந்தக் காலத்திலும் அழியாததும் எப்படிப் பார்த்தாலும் நம்மையே நோக்கும் புத்தரின் பக்தி மயமான சிலையை, நான்காள் உயரத்தில், இரண்டு ஆண்டுகள் இரவும் பகலும் இடைவிடாது கஷ்டப்பட்டு இப்பொழுதுதான் முடித்திருந்தேன். அது என் கலைத் திறமைக்கு மாபெரும் வெற்றி! அது முடிவுறும் வரை எத்தனை இரவுகள் நான் கண் மூடாமல் கழித்திருக்கிறேன்!

ஒரு வேளை... அப்படியிருக்குமோ!

சங்கமித்திரையை அப்படியே விட்டுவிட்டு நான் கலைக்கூடத்தை நோக்கித் தலைதெறிக்க ஓடினேன். கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த என் கண் முன்னால்....

**எ**ன் சங்கமித்திரையா இவள்?

தாழம்பூ கொண்டை போட்டு, உடலெல்லாம் பொன்னில் இழைய, காற் சலங்கை சலசலக்க, மஞ்சள் பூசிய முகத்தோடு மயில் அசைவது போல் ஓடி வந்த அவளா இன்று நைலக்ஸ் புடவையில் நெளிந்து, டீ பை டீ ஜாக்கெட்டில் புகுந்து, கழுத்தில் மணிமாலையும், காதில் கவரிங் கோல்டு 'ரிங்'குமாக 'பாண்ட்ஸ்' பவுடர் மணமணக்க என்னோடு வந்து கொண்டிருக்கிறாள்?

''மிஸ்டர் ரங்கநாதன், எவ்வளவு பெரிய சிலை பார்த்தீங்களா! நாலு ஆள் உயரம் இருக்கும் போலிருக்கே. அடடா! எவ்வளவு அருமையான வேலைப்பாடு! இதைச் செய்த சிற்பி மட்டும் இங்கே இருந்தால் மெரினா பீச் சிலைகளையெல்லாம் இடிக்கப் புதுசா செய்யச் சொல்லலாம் போல் இருக்கே? இவ்வளவு அழகான சிலையோட கைகள் மட்டும் உடைஞ்சு மூளியாயிட்டுது பாருங்க...'' மகாதேவன் தான் பேசிக் கொண்டிருந்தார்.

நான் திடுக்கிட்டு எதிரே பார்த்தேன். அங்கே எனது கலைத் திறமையின் எடுத்துக் காட்டான அந்தப் புத்தர் சிலையின் கைகள் மூளியாகி என்னைப் பார்த்துச் சிரித்தது.

**ஆ**ம்! அந்தப் புத்தர் சிலை என்னைப் பார்த்துச் சிரிக்கத்தான் செய்தது. ஆனால் என் இரத்தமோ கொதித்துக் கொண்டிருந்தது. நாகார்ஜுனர் ஏணி மீது ஏறி இரும்புச் சுத்தியால் அந்தச் சிலையை உடைக்க முயன்று கொண்டிருந்தார்.

சுத்தி 'ணங் ணங்' என்று ரீங்காரமிட்டது.

''அடிகளே, உங்களுக்கென்ன பைத்தியமா பிடித்துவிட்டது? கருணையே வடிவான புத்த பகவானின் சிலையையா உடைத்தெறிகிறீர்கள்? சீ! நீங்களும் ஒரு புத்த பிக்ஷுவா? உங்களுக்குக் காவி வஸ்திரமும் ஒரு கேடா?''

நானும் ஏணி மீது ஏறினேன்.

''பவானந்தா! கிட்டே நெருங்காதே. உன் பாவக் கறை படிந்த கைகளால் உருவான இந்தச் சிலையை என்னுடைய புத்த மடாலயத்தில் வைக்க நான் அனுமதிக்கமாட்டேன். ஆசைச் சேற்றில் சிக்கிப் புத்தரின் கொள்கைகளைப் புறக்கணித்த உன்னுடைய நினைவாக எதுவுமே இங்கே இருக்கக் கூடாது.''

ணங்... ணங்...

இடது கை ஒடிந்து விழுந்தது.

பெருத்த ஓசையோடு வலது கரமும் உடைந்து நொறுங்கியது.

நான் பைத்தியக்காரனானேன். வேகமாக ஏணி மீது ஏறி அடிகளாரின் கால்களை இழுத்துத் தள்ளினேன். ஏணி சரிந்து இருவருமே தரையில் விழுந்தோம்.

அடிகளார் தலையில் அடிபட்டு மூர்ச்சையானார். எனக்கோ மண்டையில் இரத்தம் கசிந்தது.

சங்கமித்திரை அப்பொழுதுதான் மூச்சு இரைக்க உள்ளே வந்தாள். இரத்தத்தைக் கண்டதும் அவள் துடிதுடித்துப் போனாள்.

''சங்கமித்திரை, பயப்படாதே.... இப்பொழுது பேச நேரமில்லை. ஓடி வா... சீக்கிரம்.... இந்த வெறி பிடித்த அடிகளார்

**நீட்டி முழக்கிக் கொட்டி அளந்து....**



பள்ளிச் சிறுவனாயிருந்தபோது, வகுப்பாசிரியர் ஒருவர் பாரத நாட்டைப் பற்றிய ஒரு பாடத்தைப் படிக்கும் போது, இந்தப் பழைய 'ஜோக்'கைச் சொன்னார். இருந்தாலும் இப்பொழுதுகூட இது எத்தனை உண்மையாயிருக்கிறது! ஓர் ஆங்கிலேயன் இலக்கணம் படிக்கும் போது I play, you play, he plays என்று படிப்பானும். ஒரு ஜெர்மானியன் I work, you work, he works என்றும், ஒரு பிரஞ்சுக்காரன், I love, you love, he loves என்றும் கற்றுக் கொள்ளுவார்களாம். ஆனால் இந்தியர்களாகிய நாம் எப்படி இலக்கணத்தைக் கற்றுக் கொள்கிறோம் தெரியுமா? I talk, you talk, he talks என்று!

- உதகை நா. மனோகரன்

எழுந்திருப்பதற்குமுன் நாம் செய்ய வேண்டிய காரியம் ஒன்றிருக்கிறது.''

அடுத்த நிமிடம்.

நானும் அவனுமாகச் சேர்ந்து சிலையின் அடிபீடத்தை மெல்ல மெல்ல நகர்த்திச் சாளரத்தருகே கொண்டு வந்தோம். சாளரத்துக்கு வெளியே 'கிருஷ்ணா' நதி ஓடிக் கொண்டிருந்தாள். சிலை நீரில் விழுகின்ற பெருத்த ஓசை கேட்டது.

''சங்கமித்திரை.... விரைவில் மற்றச் சிலைகளையும் ஆற்றில் எறிந்துவிடுவோம். இல்லையெனில் என் திறமையில் உருவான சிற்பங்களையெல்லாம் வெறி பிடித்த அடிகளார் சிதைத்துவிடுவார். என்றாவது ஒரு நாள் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகாவது... யாராவது இதைக் கண்டெடுத்து என் கலைத் திறமையைப் பாராட்டாமல் போவார்களா, என்ன....?''

எல்லாச் சிலைகளையும் கிருஷ்ணா நதியில் தூக்கியெறிந்து முடிப்பதற்குள் அடிகளார் விழித்துக் கொள்ள ஆரம்பித்தார்.

''என்ன விழித்துக் கொண்டே தூங்குறாய்? அங்கே எல்லாரும் படகிலே ஏறி உட்கார்ந்துண்டு உனக்காகக் காத்துக் கிட்டிருக்காங்க. சீக்கிரம் வாப்பா.'' நண்பர் சௌந்தரராஜன் சொல்லிவிட்டுப் போனார்.

நினைவுகளிலிருந்து விழித்துக் கொண்ட நான் மெல்ல நடக்கலானேன். அவளும் என்னைப் பின்தொடர்ந்தாள்.

மியூசியத்தை விட்டு வெளியே வந்தோம்.

''சங்கமித்திரை'' என்று மெல்ல அழைத்தேன்.

''அத்தான்...'' என்று கண்களில் நீர் தெறிக்க அவள் என்னைக் கட்டியணைத்துக் கொண்டாள்.

''அத்தான்.... என்னைவிட்டு எங்கேயும் போயிடாதீங்க.... நாம ரெண்டு பேரும் எங்கேயாவது கண் காணாத இடத்துக்குப் போயிடுவோம். எந்த ஜன்மத்திலும் இந்த உலகம் நம்மை வாழவே விடாது.''

''சங்கமித்திரை! நீ எப்படி இங்கே வந்தாய்?''

'' அத்தான்! ஹைதராபாத் உஸ்மானியா சர்வகலாசாலையில் எனக்கு எம்.ஏ. சரித்திரத்திலே இடம் கிடைச்சிருக்கு. ஹாஸ்டலிலே சேர்ந்திருக்கேன். இன்னிக்கு என்னவோ இங்கே வரணும் போலத் தோணிச்சு. வந்தேன். இல்லாவிட்டால் என் அத்தானைப் பார்த்திருக்க முடியுமா?''

''கவலைப்படாதே! சங்கமித்திரை, வா, போவோம். இனி யாரும் நம்மைப் பிரிக்கவே முடியாது. வாழ்விலும் மரணத்திலும் ஒன்றாகவே இருப்போம்.''

இருவரும் கைகோத்து வருவதைப் பார்த்த தமிழ்ச் சங்க உறுப்பினர்களுக்கு ஒரே ஆச்சரியம்... கோபம்... பொறாமை... என்னோட சீனியர் முகத்தைக் 'கடுகடு'வென்று வைத்துக் கொண்டு விழித்துப் பார்த்தார்!

யாரையும் லட்சியம் செய்யாது, நானும் அவளும் படகில் ஏறி அருகருகே நெருங்கி அமர்ந்து கொண்டோம்.

மகாதேவன்தான் முணு முணுத்துக்கொண்டிருந்தார். நான் அவரைத் திரும்பிப் பார்த்தேன்.

நான் திரும்பிப் பார்த்த சமயத்தில் நாகார்ஜுன அடிகளுக்கு நினைவு திரும்பிக் கொண்டிருந்தது. எங்கள் இருவரையும் முறைத்துப் பார்த்த அவர், கையிலிருந்த கத்தியுடன் எங்களை நெருங்கி வருவதற்குள்—
''சங்கமித்திரை, வா, ஓடிவிடுவோம்.''

நானும் அவளும் சாளரத்தின் வழியாகக் கிருஷ்ணா நதியில் குதித்துவிட்டோம்.

''சங்கமித்திரை... சங்கமித்திரை...''

பின்னால் அடிகளார் அலறுவது கேட்டது.

நாங்கள் இருவரும் எங்கேயோ... எங்கேயோ... யாரும் அறியாத அதலபாதாளத்துக்கு, யாருமே நெருங்க முடியாத சொப்பனபுரிக்கு, கிருஷ்ணாவின் ஆழத்துக்குச் சென்று கொண்டேயிருக்கிறோம். இனி நாங்கள் இந்த உலகத்துக்குத் திரும்பி வரமாட்டோம். என்றாவது ஒரு நாள் நான் படைத்த கலைச் சிற்பங்கள் இந்த நாட்டுக்குத் திரும்பக் கிடைக்கலாம். ஆனால் அழிந்து போகும் நாங்கள் திரும்பக் கிடைக்கமாட்டோம். வருகிறேன், நண்பர்களே!

மகாதேவனைத் திரும்பிப் பார்த்தவன், திமிறனச் சங்கமித்திரையின் கையைப் பிடித்திழுத்துக் கொண்டு படகின் மையத்துக்கு வந்து நின்றேன்.

'' நண்பர்களே! உங்களுடைய சந்தேகங்கள், முணுமுணுப்புக்கள் எனக்குப் புரிகின்றன. இவள் வேறு யாரும் இல்லை. என் பூர்வ ஜன்ம மனைவி. மிஸஸ் பவழராயன் சங்கமித்திரை. நீங்கள் யாரும் எங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அன்று நாகார்ஜுன அடிகளுக்குப் பயந்து திரும்பி வரவே கூடாது என்று உயிரை மாய்த்துக் கொண்டோம். ஆனால் விதி எங்களை மீண்டும் சேர்த்து வைத்துவிட்டது. அன்றாவது எங்கள் காதலுக்குக் குறுக்கே ஒரே ஒரு நாகார்ஜுனர் தான் இருந்தார். இந்த இருபதாம் நூற்றாண்டிலோ நீங்கள் அத்தனை பேருமே நாகார்ஜுன அடிகளாகத் தோன்றுகிறீர்கள். எத்தனை நூற்றாண்டுகளானாலும் உங்களுடைய எண்ணங்களும் இதயங்களும் மாறப் போவதில்லை. வா... சங்கமித்திரை! மீண்டும் நாம் போய் விடுவோம். இந்த வெட்கம்கெட்ட உலகத்துக்கு நமது உணர்வுகள் புரியவே போவதில்லை.... வா...''

அவளுடைய கையைப் பிடித்திழுத்துக் கொண்டு நான் கிருஷ்ணா நதியில் குதித்தேன்.

சத்தியமாக நாங்கள் இனி திரும்பி வரவே மாட்டோம்.

என்ன ஸார், ஏன் பைத்தியம் பிடித்தாற் போல் ஓடுகிறீர்கள்? என்னோட கதையை உங்களால் நம்பவே முடியவில்லையா? சரி, போகட்டும். மாம்பலம் பக்கம் போனீர்களானாலும் என்னோட மாமா பொண்ணுகிட்டே சொல்லிடுங்கோ, நான் இனி திரும்பி வர மாட்டேன்னு

ஸார்....! ஸார் ...! ஸார்....!

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி



நாற்பத்துமூன்றாம் அத்தியாயம்

## பிக்ஷு யார்?

பிக்ஷுவிடம் தான் கவர்ந்து கொண்டு வந்தது விஷக் கத்தி என்று தெரிந்து நடுங்கிய குண்டோதரனைப் பார்த்து, "பிக்ஷுவை எங்கே விட்டுவிட்டு வந்தாய்? சீக்கிரம் சொல்" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"கோயில் மடப் பள்ளிக்குள்ளே அடைத்துத் தாழிட்டு வந்திருக்கிறேன், பிரபு!" என்றான் குண்டோதரன்.

"நல்ல காரியம் செய்தாய்! வா, போகலாம்! கிராமத்துக்கு வழிகாட்டு!" என்றார் மகேந்திர பல்லவர்.

அப்போது சத்ருக்னன், "பிரபு! கிராமத்துக்கு நாம் ஏன் இப்போது போக வேண்டும்? நாம் வந்த காரியம் ஆகிவிட்டது. புத்த பிக்ஷுவைக் குண்டோதரன் கவனித்துக் கொள்வான். நாம் போகலாம், வாருங்கள்!" என்று கவலை தொனித்த குரலில் கூறினான்.

மகேந்திர பல்லவர், "இல்லை, சத்ருக்னா! நாம் வந்த காரியம் இன்னும் ஆகவில்லை. வாதாபிப் படைகளைத் தடுப்பதைக் காட்டிலும் முக்கியமான காரியம் இங்கே நமக்கு இருக்கிறது. துரோகி துர்விநீதனைச் சிறைப்படுத்தியது பெரிய காரியமில்லை. நாகநந்திப் பிக்ஷுவைச் சிறைப் பிடித்துக் கொண்டு போனோமானால், இந்த யுத்தத்தில் நமக்கு முக்கால் பங்கு வெற்றி கிடைத்துவிட்டது" என்றார்.

"பிரபு! அவ்வளவு முக்கியமான காரியமாயிருந்தால், பிக்ஷுவை வெகு நாளைக்கு முன்னமே சுலபமாகச் சிறைப்படுத்தி

யிருக்கலாமே? ஆயனர் வீட்டி லேயே பிடித்திருக்கலாமே?''

''இத்தனை நாளும் பிக்ஷு சுயேச்சையாக இருந்தல் நான் உத்தேசித்திருந்த காரியங்களுக்கு அவசியமா யிருந்தது. இனிமேல் அவர் வெளியில் இருந்தால் பாத கம் விளையும்.''

''பிரபு! பிக்ஷுவைச் சிறைப் பிடிக்கும் வேலையை என்னிடமும் குண்டோதரனிடமும் ஒப்படை யுங்கள். தாங்கள் உடனே புறப் பட்டுச் செல்லுங்கள். ஆற்றுக்கு அக்கரையில் கண்ணபிரான் ரதத் தைப் பூட்டி ஆயத்தமாய் வைத் திருக்கிறான்.''

''இந்த வேலையை உங்களிரு வரிடமும் கூட ஒப்படைக்க முடி யாது, சத்ருக்னா! நானேதான் செய்தாக வேண்டும். குண்டோ



தரா! போ முன்னால்!'' என்றார் மகேந்திர பல்லவர்.

அதற்கு மேல் சத்ருக்னன் வாய் திறக்கவில்லை. மூன்று பேரும் ஏறக் குறையப் பொழுது புலரும் சமயத்தில் மண்டபப் பட்டுக் கிராம எல்லையை அடைந்து, கோயில் வெளி மதிலைத் தாண்டிக் குதித்து, உள்ளே சென்றார்கள். மடைப் பள்ளியின் கதவு வெளியே தாழிடப்பட்டபடி இருந்தது. சற்றுக் கர்வத்துடனேயே குண் டோதரன் அந்த வெளித் தாழ்ப்பாளை அப்புறப்படுத்திக் கதவைத் திறந்தான். மூவரும் உள்ளே பிரவேசித்தார்கள். நாற் புறமும் நன்றாய்ப் பார்த்தார்கள்.

மடைப்பள்ளியின் உட்புறம் சூனியமா யிருந்தது! மேற் கூரையில் சில ஓடுகள் எடுக்கப் பட்டபடியினால் உண்டாகி யிருந்த துவாரம் பிக்ஷு எவ் விதம் அங்கிருந்து தப்பிச் சென் றார் என்பதைத் துலாம்பரமாகத் தெரியப்படுத்தியது.

''நினைத்தேன், சத்ருக்னா! பிக்ஷுவைச் சிறைப் பிடிக்கும் வேலையை உங்களிடம் நான் ஒப்புவியாததன் காரணம் இப் போது தெரிகிறதா?'' என்றார் மகேந்திர பல்லவர்.

''குண்டோதரா! பல்லவேந்திரர் கூறியது காதில் விழுந்ததா? காஞ்சி ஒற்றர் படைக்கு நீ அழியாத அவமானத்தை உண்டு பண்ணி விட்டாய்!'' என்ருன் சத்ருக்னன்.

''எஜமானே! அந்த அவமானத்தை இன்றைக்கே போக்கி விடுகிறேன். கருணை புரிந்து தங்களிடமுள்ள கத்தியை இங்கே கொடுங்கள். நாகநந்தி பிக்ஷு இந்தக் கிராமத்திலேதான் இன்னும் இருக்க வேண்டும். நாளைப் பொழுது விடிவதற்குள் அவரைக் கண்டு பிடித்து அவருடைய தேகத்தில் இந்த விஷக் கத்தியைப் பதித்துக் கொல்லாவிட்டால், என்னுடைய நெஞ்சிலே இதைப் பதித்துக் கொண்டு உயிரை விடுவேன்'' என்ருன் குண்டோதரன்.

சத்ருக்னன் கத்தியைக் குண்டோதரனிடம் கொடுக்க யத்தனித்தபோது மகேந்திர பல்லவர் குறுக்கிட்டு அதை வாங்கிக் கொண்டார்.

''குண்டோதரா! இந்தமாதிரி அசட்டுத்தனமான சபதம் இனிமேல் செய்யாதே! புத்த பிக்ஷுவின் உடம்பில் இந்தக் கத்தியை நீ செலுத்த முடியாது. அவருடைய தேகம் வஜ்ர தேகம். அவரைக் குத்தினுல் கத்தியின் முனைதான் மழுங்கும். அப்படி அவரை நீ காயப்படுத்தினுலும் இந்தக் கத்தியில் உள்ள விஷம் அவரைக் கொல்லாது...'' என்ருர் மகேந்திர சக்கரவர்த்தி.

''அது எப்படி பிரபு! பிக்ஷு மந்திரவாதியா? மந்திர சாதனங்களில் உங்களுக்குக்கூட நம்பிக்கை உண்டா?'' என்று கேட்டான் சத்ருக்னன்.

''மந்திரமும் இல்லை; மாயமும் இல்லை. விஷத்தை விஷம் ஒன்றும் செய்ய முடியாதல்லவா? புத்த பிக்ஷுவின் தேகத்தில் ஓடும் இரத்தம் விஷம் கலந்த இரத்தம். எத்தனையோ காலமாக விஷ மூலிகைகளை அருந்தி உடம்பையே விஷமயமாகச் செய்து கொண்டவர் அந்த மகான்!''

''ஐயோ! என்ன பயங்கரம்!'' என்ருன் சத்ருக்னன்.

''புத்த பிக்ஷுவின் தேகத்தில் காற்றுப்பட்டு வந்ததும் அக்கம் பக்கத்தில் உள்ள நாகங்கள் மிரண்டு அங்குமிங்கும் ஓடும்!''





''ஆம், எஜமானே! நானும் பார்த்திருக்கிறேன். அதன் காரணம் இப்போதுதான் தெரிகிறது!'' என்று குண்டோதரன் கூறியபோது, அவனுடைய உடம்பு நடுங்கிற்று.

''கெடில நதிக் கரையில் அந்தப் பயங்கரமான சர்ப்பக் குகையைப் பார்த்தோமே, ஞாபகமிருக்கிறதா, சத்ருக்னா?''

''அதை மறக்க முடியுமா பிரபு!''

''அதன் மர்மம் என்னவென்பதைக் கண்டுபிடித்தாயா?''

''என்ன யோசித்தும் ஊகிக்க முடியவில்லை.''

''நான் சொல்லுகிறேன். காஞ்சிக் கோட்டையை வேறு வழியில் பிடிக்க முடியாவிட்டால், கோட்டைக்குள் இருக்கும் குடி தண்ணீரில் எல்லாம் விஷத்தைக் கலந்து விடலாம் என்பதற்காகத்தான்...!''

''என்ன கொடுமை? இவ்வளவும் கருணா மூர்த்தியான புத்த பெருமானின் பெயரால், ஒரு புத்த பிக்ஷுவால் செய்யப்படுகிறதா? என்றால் நம்ப முடியவில்லையே!'' என்றான் சத்ருக்னன்.

''நம்ப முடியாத காரியம்தான். ஆனால், புத்த பிக்ஷு நிஜமான புத்த பிக்ஷு இல்லையே! காவித் துணியையும் பௌத்த சங்கங்களையும் தன்னுடைய காரியங்களுக்காக உபயோகப்படுத்திக் கொள்ளும் மிக மிகச் சாமர்த்தியசாலியான ஒற்றன் அல்லவா?''

''அப்பேர்ப்பட்ட கிராதகக் கொலைபாதகனைக் கொல்லாமல் விட வேண்டும் என்கிறீர்களா?''

''கொல்லுவதனால் பயன் இல்லை. சிறை பிடித்து வைத்தோமானால் புலிகேசியுடன் நாம் நடத்தும் யுத்தத்தில் ஒரு பெரிய ஆயுதமாகப் பிக்ஷு உபயோகப்படுவார்!''

''பிரபு! பிக்ஷு யார்?'' என்று கேட்டான் சத்ருக்னன்.

''ஓர் யூகம் இருக்கிறது. நிச்சயமாகத் தெரிந்த பிறகு சொல்கிறேன், சத்ருக்னா! நீயும் உன் சிடன் குண்டோதரனும் இதுவரையில் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எவ்வளவோ மகத்தான சேவைகளைப் புரிந்திருக்கிறீர்கள். ஆனால் அவை எல்லாவற்றையும் விடப் பரம முக்கியமான காரியம் உங்களால் இப்போது ஆக வேண்டியிருக்கிறது. நான் சொல்லுவதை இருவரும் கவனமாகக் கேட்டு அந்தப்படி செய்தால், காரியம் ஜயமாகலாம். என்ன சொல்லுகிறீர்கள்?''

''தங்கள் சித்தம் பிரபு! கட்டளைப்படி அணுவும் பிசகின்றி நடந்து கொள்கிறோம்'' என்றான் சத்ருக்னன்.

பொழுது புலரும் நேரத்தில் பன்னீர் மரத்திலே மலர்ந்து குலுங்கிய புஷ்பங்கள் 'கம்'மென்று மணம் வீசின.

ஏறக்குறைய வட்ட வடிவமாயிருந்த சந்திரன் பொன்னிறத்தை இழந்து வெண் தாமரையின் நிறத்தைப் பெற்று மேற்குத் திசையின் அடியில் அமிழ்ந்து கொண்டிருந்தான்.

அந்த அதிகாலை நேரத்தில் கோயில் பிராகாரத்தில் மடைப்பள்ளி வாசலில் மகேந்திர சக்கரவர்த்தி அமர்ந்து சத்ருக்னனையும் குண்டோதரனையும் அருகில் உட்காரச் சொல்லி, அவர்கள் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றிக் கூறினார். ஒற்றர்கள் இருவரும் மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டார்கள்.

### நாற்பத்துநாலாம் அத்தியாயம்

## சிங்க இலச்சினை

மறுநாள் பொழுது விடிந்து சூரியன் வான வெளியில் இரண்டு நாழிகை பிரயாணம் செய்திருந்தும், மண்டபப்பட்டுக் கிராமத்து வீதிகளில் ஜன நடமாட்டமும் கலகலப்பும் இல்லை. இரண்டு நாட்களாக இரவில் நடந்த களியாட்டங்களில் ஈடுபட்டதனாலும், எதிர்பாராத விந்தைச் சம்பவங்களினால் உள்ளக் கிளர்ச்சியடைந்து தூக்கமின்றி இரவு நேரங்களைக் கழித்ததனாலும், அந்தக் கிராமவாசிகள் அன்று காலை கொஞ்சம் மந்தமாகவே இருந்தார்கள். பல வீடுகளில் வாசற் கதவுகள் இன்னும் திறக்கப்படாமலே இருந்தன. திருநாவுக்கரசர் மடத்து

# வாலிப மிடுக்கோட வாழுங்க ஆனந்தமா!

நீஞ்சற வயசுலே ஒஞ்சு கிடப்பாங்களா? மூச்சுத் திணறினவனுக்கு முகூர்த்தம் போச்சு. உங்களுக்கென்ன? 'தம்' இல்லாமப் போகுமா. விரலே அசைச்சா வீரியம் துள்ளிவரும்: வெள்ளிக் காசுக் கணக்கா இந்தாங்க ஒகாஸா. இந்தக் காலத்து டானிக் மாத்திரை. நாளுங்க கிழவினாலும் நாடி தளராத தெம்புக்கு: ஒகாஸா. சளிக்காம பல காலம் சிலம்பம் வீசி வாழலாம். ஜமாயுங்க—மௌதாளத்தோட.

வல்லவராய் வாழ்வதற்கே

## ஒகாஸா

ஹார்மோ-பார்மா லிமிடெட், லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

ஆண்களுக்கு வெள்ளி நிற மாத்திரை— எல்லா முக்கிய மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்

OKASA CO.PVT.LTD., 12K Gunbow Street, P. B. No. 396, Bombay-400001




---

# அறுவை சிகிச்சை இன்றியே மூலநோயைக் குணப்படுத்த அபூர்வ மருந்து !




## பிரிபரேஷன் எச் *

அமெரிக்க டாக்டர்களால் பரீட்சிக்கப்பட்டது.

- நிமிடங்களில் கனமச்சலே நிறுத்துகிறது.
- வலியிலிருந்து உடனே நிவாரணமளிக்கிறது.
- மூலநோய் கடுமையாக இல்லாவிட்டால், அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தைச் சுருக்க உதவுகிறது.
- இதனால் எண்ணெய்ப்பசை கிடைக்கிறது; மலம்போக்கு வலியின்றி எளிதாகிறது.

***இலவசம்!*** மூலநோய் பற்றிய விளக்கப் புத்தகமொன்றை இலவசமாகப் பெற (25 பைசா தபால் தலையுடன்) இன்றே எழுதுக. இம் முகவரிக்கு : டிபார்ட்மென்ட். PH-66, த.பெ.எண். 10133, பம்பாய்-400 001.

* Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.

743 PH-92 Tam

வாசற் கதவும் அவ்வாறே உட்புறம் தாழிடப்பட்டுத்தான் இருந்தது. ஆனால், உள்ளே பேச்சுக் குரல் கேட்டது.

குண்டோதரன், சத்ருக்னன், வஜ்ர பாஹு ஆகிய மூவரும் அந்த வேளையில் மடத்து வாசலுக்கு வந்தார்கள்.

குண்டோதரன் கதவை இடித்தான். உள்ளே கேட்டுக் கொண்டிருந்த பேச்சுக் குரல்களின் சத்தம் உடனே நின்றது.

மனிதர் நடமாடும் சத்தமும், கதவுகள் திறந்து மூடப்படும் சத்தமும் கேட்டன.

பிறகு, வாசற் கதவு திறந்தது.

ஆயனர் வெளியே வந்து, "நீதானா, குண்டோதரா! இராத்திரியெல்லாம் எங்கே போயிருந்தாய்? உன்னை நம்பி னால்..." என்று சொல்லிக் கொண்டு வந்தவர், வஜ்ரபாஹுவையும் சத்ருக் னனையும் பார்த்துவிட்டு, "இவர்கள் யார்?" என்று கேட்டார்.

"நேற்றிரவு இரண்டு பேர் வந்திருந் தார்கள் — சிற்பக் கலையில் ஊக்கம் உள்ளவர்கள் — என்று சொன்னேனே அவர்கள்தான்! இராத்திரியெல்லாம் இவர்களைத் தேடிக் கடைசியில் பொழுது விடியும் சமயத்தில் கண்டு பிடித்தேன். தங்களைப் பார்க்க வேண்டு மென்று சொன்னபடியால் அழைத்து வந்தேன்" என்றான் குண்டோதரன்.

"அப்படியா, உள்ளே வாருங்கள்! அம்மா! சிவகாமி! மணை எடுத்துப் போடு!" என்றார் ஆயனர்.

ஆயனருக்குப் பின்னால் நின்ற சிவ காமி உடனே மணைகளை எடுத்துப் போட்டாள். ஆயனரும் வந்தவர்கள் இருவரும் உட்கார்ந்தார்கள். சிவ காமியை வற்புறுத்தி உட்காரச் சொல் லியும் அவள் உட்காரவில்லை. புதிதாக வந்த இருவரையும் அவலுடன் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"உங்களைப் பற்றிக் குண்டோதரன் சொன்னான். — சிற்பத்தில் ஆர்வம் உள்ளவர்கள் என்று. உங்கள் இரு வருக்கும் எந்த ஊரோ?" என்று ஆயனர் கேட்டார்.

"குருவே! என்னைத் தெரியவில் லையா?" என்றான் சத்ருக்னன்.

"தெரியவில்லையே, அப்பா! நீ எப் போதாவது என்னிடம் சிற்பம் கற்றுக் கொண்டாயா, என்ன?"

"ஆம், ஐயா! சிவகாமி அம்மையை வேணுமானால் கேளுங்கள். அவருக்கு ஞாபகம் இருக்கும்."

"ஆமாம், அப்பா! இரண்டு மூன்று நாட்கள் இவர் உங்களுடைய சீடரா யிருந்தார்!" என்றாள் சிவகாமி.

"என் அதிர்ஷ்டம் அப்படி! நான் வந்த சில நாளைக்கெல்லாம் தாங்கள் மாமல்லபுரத்துக்குப் போனீர்கள்..." என்றான் சத்ருக்னன்.

"பிறகு கொஞ்ச நாளைக் கெல்லாம் எல்லா வேலையும் நின்று விட்டது. இந் தப் பாழும் யுத்தம் எதற்காக வந் ததோ, எப்போது முடியப் போகிறதோ, தெரியவில்லை!" என்று ஆயனர் கூறிப் பெருமூச்சு விட்டார்.

"இன்னும் கொஞ்சம் பொறுமையா யிருங்கள், ஆயனரே! யுத்தம் சீக் கிரத்தில் முடிந்து விடும். தாங்கள் பழையபடி தங்கள் அரண்ய வீட்டுக்குப் போகலாம்!" என்றான் வஜ்ரபாஹு.

அந்தக் குரலைக் கேட்டதும் ஆயனர் சிறிது திடுக்கிட்டவராய், வஜ்ர பாஹுவை நோக்கி, "ஐயா! தாங்கள் யாரோ?" என்றார்.

"என்னை நிஜமாகவே தெரியவில் லையா ஆயனரே!"

"பார்த்த ஞாபகமாய் இருக்கிறது."

அப்போது சிவகாமி தந்தையின் அரு கில் வந்து அவருடைய காதோடு, "சக்கரவர்த்தி அப்பா, தெரியவில் லையா?" என்றாள்.

ஆயனர் அளவிட முடியாத வியப் புடன் ஒரு கணம் வஜ்ரபாஹுவின் முகத்தை உற்று நோக்கினார். பின்னர், அவசரமாகப் பீடத்தை விட்டு எழுந்து "பிரபு! இது என்ன வேஷம்! அடை யாளமே தெரியவில்லையே?" என்றார்.

"வேஷம் போடும் கலையில் என்னு டைய சாமர்த்தியம் இப்போதுதான் எனக்குத் திருப்தி அளித்தது. போர்க் களத்தில் புலிகேசியின் முன்னால் நின்று தூது சொல்லிவிட்டுத் திரும்பியபோது கூட இவ்வளவு திருப்தி எனக்கு உண் டாகவில்லை!" என்றார் மகேந்திரர்.

ஆயனர், "பல்லவேந்திரா! குண் டோதரன் நேற்றிரவே என்னிடம் சொன்னான்: 'யாரோ இருவர் வந் திருக்கிறார்கள், அவர்கள் இந்தக் கிராமத்துப் பாறைகளைப் பார்த்துவிட் டுக் கோவில் அமைப்பது பற்றிப் பேசினார்கள் என்று. உடனே தங்க ளுடைய ஞாபகம் எனக்கு வந்தது. அப்படிப்பட்ட சிற்ப மனோ கற்பனை உள்ளவர்கள் நம் சக்கரவர்த்தியைத் தவிர யார் உண்டு என்று எண்ணி னேன். கடைசியில், தாங்களாகவே இருக்கிறீர்கள். பிரபு! இந்த ஏழைச் சிற்பியைப் பார்ப்பதற்காக இவ்வளவு தூரம் தேடி வந்தீர்களே? தங்களைப் பார்த்து எத்தனை காலம் ஆகிவிட்டது? ஒரு யுகம் மாதிரி இருக்கிறது" என்றார் ஆயனர்.

"ஆயனரே! உங்களிடம் பொய் வேஷத்துடன் வந்தேன். அதோடு பொய் சொல்லவும் விரும்பவில்லை.



நான் இங்கே வந்தது உங்களைப் பார்ப்பதற்காக அல்ல. என் மகன் மாமல்லனைத் தேடிக் கொண்டு வந்தேன்'' என்றார் சக்கரவர்த்தி.

சிவகாமி நாணத்தினால் தலை குனிந்து கொண்டாள்.

ஆயனர் சிறிது தடுமாறிவிட்டு, ''பல்லவேந்திரா! மாமல்லர் நேற்று இரவே புறப்பட்டுச் சென்று விட்டாரே! குண்டோதரன் சொல்லவில்லையா?'' என்று கேட்டார்.

''மாமல்லனும் பரஞ்சோதியும் இத்தனை நேரம் காஞ்சிப் பாதையில் போய்க் கொண்டிருப்பார்கள். வந்த இடத்தில் உங்களையும் பார்த்துவிட்டு, மாமல்லனைக் காப்பாற்றியதற்காக நன்றி சொல்லி விட்டுப் போகலாம் என்று வந்தேன்'' என்றார் சக்கரவர்த்தி.

''பிரபு! மாமல்லரை நாங்கள் காப்பாற்றவில்லையே? வெள்ளத்தில் முழுகிப் போக இருந்த எங்களையல்லவா குமார சக்கரவர்த்தி தக்க சமயத்தில் வந்து காப்பாற்றினார்!''

''ஆம், ஆயனரே! அதுவும் எனக்குத் தெரியும். ஆனால், மாமல்லனுடைய உயிரை நீங்கள் காப்பாற்றியதும் உண்மைதான். 'நீங்கள்' என்றால் முக்கியமாக உங்கள் குமாரியைச் சொல்லுகிறேன். இதோ பார்த்தீர்களா, இந்தக் கத்தியை!'' என்று சக்கரவர்த்தி கூறி நாகப் பிடி அமைந்த கத்தியை எடுத்துக் காட்டினார்.

ஆயனர், சிவகாமி இருவரும் அந்தக் கத்தியை இன்னதென்று விளங்காத பயங்கரத்துடன் பார்த்தார்கள்.

''இந்த விஷக் கத்தி மாமல்லன் மேல் பாய்வதற்கு இருந்தது. அப்போது சிவகாமி பக்கத்தில் இருந்தபடியால் மாமல்லன் அந்த அபாயத்திலிருந்து தப்பினான்.''

சிவகாமி நடுங்கினாள். அவளுடைய இருதய பீடத்தில் வீற்றிருக்கும் தெய்வத்தின் பேரில் விஷக் கத்தி பாய்வதற்கு இருந்தது என்று எண்ணிய போது அவளுடைய நெஞ்சில் அந்தக் கத்தி பாய்ந்து விட்டது போன்ற வேதனை உண்டாயிற்று. அவ்விதம் நேராமல் தன்னால் மாமல்லரைக் காப்பாற்ற முடிந்தது என்ற எண்ணம் சொல்ல முடியாத உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கியது. ஆனால் தான் காப்பாற்றியது எப்படி என்பது தெரியாதபடியால் திகைப்பும் ஏற்பட்டது.

''பிரபு! என்ன சொல்கிறீர்கள்? குமார சக்கரவர்த்தியின் மேல் விஷக் கத்தி ஏன் பாய வேண்டும்? அவ்விதம் செய்ய எண்ணிய பாதகன் யார்? அதை எவ்விதம் சிவகாமி தடுத்தாள்! எல்லாம் ஒரே மர்மமாக இருக்கிறதே? சிவகாமி! உனக்கு ஏதேனும் தெரியுமா?'' என்று ஆயனர் கேட்டார்.

''சிவகாமியைக் கேட்பதில் பயனில்லை. அவளுக்கு ஒன்றும் தெரியாது; சமயம் நேரும்போது நானே எல்லாம் சொல்கிறேன். இப்போதைக்கு அபாயம் நீங்கி விட்டது. மாமல்லன் காஞ்சிப் பாதையில் வெகு தூரம் இதற்குள் போயிருப்பான். நானும் போக வேண்டியதுதான். ஆயனரே! இந்த மண்டபப்பட்டுக் கிராமம் உங்களுக்குப் பிடித்திருக்கிறதல்லவா? யுத்தம் முடியும் வரையில் இங்கேயே நீங்கள் தங்கியிருக்கலாமல்லவா?''

''ஆம், பிரபு! அப்படித்தான் உத்தேசம். இந்தக் கிராமவாசிகள் மிகவும் நல்லவர்கள். கலை அபிமானம் உள்ளவர்கள். பாறைக் கோயில்கள் அமைக்க உதவி செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள்.''

''நானும் அதற்கு ஏற்பாடு செய்கிறேன். உங்களுக்கு வேண்டிய திரவியமும், ஆட்களும், கருவிகளும் கொடுத்து உதவும்படி திருக்கோவலூர்க் கோட்டத்து அதிகாரிக்குக் கட்டளை அனுப்புகிறேன்.''

''பல்லவேந்திரா! தாங்கள் ஒரு நாளாவது இங்கே தங்கலாமா? இன்று சாயங்காலம் பாறைகளைப் போய்ப் பார்த்து, எப்படி எப்படிக் கோயில் அமைக்கலாம் என்று தீர்மானிக்கலாமே?''

மகேந்திர சக்கரவர்த்தி சிரித்துவிட்டு, ''ஆயனரே! காஞ்சிக்கு மூன்று காத தூரத்தில் வாதாபிப் படைகள் வந்து

கொண்டிருக்கின்றனவாம். அந்தப் படைகள் காஞ்சிக்கு வருவதற்குள் நான் போயாக வேண்டும்'' என்றார்.

''அப்படியா? இங்கிருந்து காஞ்சி ஏழு காத தூரம் இருக்குமே? எப்படிப் போவீர்கள்?'' என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

''அதைப் பற்றிக் கவலையில்லை. நதியின் அக்கரையில் கண்ணபிரான் ரதத்துடன் காத்திருக்கிறான்.''

அப்போது சிவகாமி ஆயனரைப் பார்த்து, ''கமலி சௌக்கியமாயிருக்கிறாளா என்று கேளுங்கள் அப்பா!'' என்றாள்.

''கமலி சௌக்கியம் அம்மா! கண்ணபிரான் உன்னைப் பார்த்துக் கமலியைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்று எவ்வளவோ ஆவலுடன் இருந்தான். நான்தான் வரக் கூடாதென்று தடுத்து விட்டேன்.''

சிவகாமி மறுபடியும் ஆயனரைப் பார்த்து, ''அப்பா! கமலிக்குக் குழந்தை பிறந்ததும் சொல்லி அனுப்பச் சொல்லுங்கள்!'' என்றாள். எக்காரணத்தினாலோ, மகேந்திர பல்லவரை ஏறிட்டுப் பார்க்கவே அவளுக்குச் சங்கோசமாயிருந்தது.

''ஆகட்டும், சிவகாமி! அப்படியே சொல்லி அனுப்பச் சொல்லுகிறேன். ஆயனரே! நான் புறப்படட்டுமா? போகும் வழியில் வேணுமானால் சற்றுப் பாறைகளைப் பார்த்து விட்டுப் போகலாம். நீரும் வருகிறீரா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''ஆகட்டும் பிரபு! அதை விட எனக்கு என்ன வேலை?'' என்று ஆயனர் எழுந்தார்.

''இன்னும் ஒரு விஷயம் மறந்து விட்டேன்'' என்று கூறி, மகேந்திர பல்லவர் தமது அங்கிப் பையிலிருந்து அறுகோண வடிவமான பதக்கம் ஒன்றை வெளியில் எடுத்தார்.

அதைக் காட்டி, ''ஆயனரே! இது என்ன தெரிகிறதா?'' என்று சக்கரவர்த்தி கேட்கவும், ''தெரிகிறது பிரபு! சிங்க இலச்சினை'' என்றார் ஆயனர்.

''ஆம், ஆயனரே! இந்த இலச்சினை பல்லவ இராஜ்யத்தில் மொத்தம் பதினொரு பேரிடம்தான் இருக்கிறது. பன்னிரண்டாவது இலச்சினையை உம்மிடம் கொடுக்கிறேன். இதைக் காட்டினால் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் எந்த மூலை முடுக்கிலுள்ள அதிகாரியும் நீர் விரும்பியதைச் செய்வார். எந்தக் கோட்டைக் கதவும் உடனே திறக்கும். இதை வைத்துக் கொண்டு என்னையும் மாமல்லனையும் எந்த நேரத்திலும் பார்க்க



லாம். இந்த யுத்த காலத்தில் உம்மிடம் இது இருக்கட்டும் என்று கொடுக்கிறேன். சர்வ ஜாக்கிரதையாய் வைத்துக் கொள்ள வேண்டும். ஏதாவது மிகவும் முக்கியமான காரணம் ஏற்பட்டாலன்றி இதை உபயோகிக்கக் கூடாது'' என்று கூறிச் சக்கரவர்த்தி இலச்சினையை நீட்டினார்.

''பிரபு! இந்த ஏழைச் சிற்பிக்கு எதற்காக இந்தச் சிங்க இலச்சினை?'' என்று ஆயனர் அதை வாங்கிக் கொள்ளத் தயங்கினார்.

''ஆயனரே! இந்தப் பெரிய இராஜ்யத்தில் உம்மையும் உம்முடைய குமாரியையும் காட்டிலும் எந்தச் செல்வத்தையும் நான் பெரிதாகக் கருதவில்லை. ஏதாவது ஒரு சமயத்துக்கு வேண்டியதாயிருக்கலாம். ஆகையால், வாங்கிப் பத்திரமாய் வைத்துக் கொள்ளும்'' என்று மகேந்திர பல்லவர் கையை நீட்டிக் கொடுக்க, அதற்குமேல் ஆயனரால் அதை மறுக்க முடியவில்லை. பயபக்தியுடன் வாங்கிக் கொண்டு, ''அம்மா, சிவகாமி! இதை உன் பெட்டியில் பத்திரமாய் வைத்து விட்டு வா!'' என்று சொல்லிக் கொடுத்தார்.

சிவகாமி அந்தச் சிங்க இலச்சினையை வாங்கிக் கொண்டு அடுத்த அறைக்குள் அதைப் பத்திரப்படுத்தப்போனாள். அங்கே அந்தக் கிராமத்துப் பெரிய வீட்டுப் பெண்மணிகள் அவளுடைய ஆடை ஆபரணங்களை வைத்துக் கொள்ளுவதற்காக அளித்திருந்த அழகிய வேலைப்பாடமைந்த பெட்டி இருந்தது. பெட்டியைத் திறந்து அதற்குள்ளே சிங்க இலச்சினையைச் சிவகாமி பத்திரப்படுத்தினாள்.

அவ்விதம் அவள் பெட்டியைத் திறந்து இலச்சினையை வைத்ததை அதே அறையில் ஒரு தூணுக்குப் பின்னால் மறைந்திருந்த நாகநந்தி பிக்ஷு கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்!

(தொடரும்)

## ஊர்வம்பு

பூர்ணம் விசுவநாதன் அய்யாசாமி. வாயில் சதா வெற்றிலை பாக்கைப் புகையிலையுடன் குதப்பிக் கொண்டு யாரையும் அலட்சியமாகச் சாடும் தினுசே அலாதிதான். பட்டம்மி 'மாமா' என்று அழைத்துக்கொண்டு அய்யாசாமியிடம் வரும்பொழுதெல்லாம் அவர் வெற்றிலை பாக்குடன் ஊர்வம்பையும் அநாயாசமாகச் சேர்த்துக் கொண்டு மென்று அசைபோடும் லாகவம் பிரமாதம். முதலில் பட்டம்மியைப் போகச் சொல்லிவிட்டு, அவன், 'கமலாம்பா மாமியாத்துக்குப் போயிருந்தேன்' என்று தயங்கியபடி சொன்னதும் பரபரப்புடன் அவன் கையைப் பிடித்துக் கொண்டு 'கமலாம்பா மாமியகத்தில் என்ன?' என்று மிகவும் சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டே அழைத்து வந்து உள்ளே உட்கார வைக்கும் நேர்த்தியே அலாதி. ஊர் வம்பில் அய்யாசாமிக்கு எந்த விதத்திலும் தாழ்ந்தவளல்ல கமலாம்பாள் மாமி. ஷோபா தன் நடிப்புத் திறமையால் அந்தப் பாத்திரத்துக்குத் தனிச் சோபையைத் தந்து விட்டார். சதா வம்பளப்பதோடல்லாமல், ஜன்னல் வழியாக எதிர் வீட்டில் நடக்கும் விவகாரங்களைப் பார்த்துப் பார்த்து 'ரன்னிங் காமண்டரி' கொடுப்பது மிகவும்சுவாரஸ்யமாக இருக்கிறது. மருமகள் லலிதா மிகவும் பதவிசு. அத்தையைப் பற்றிக் கணவனிடம் குறை கூறும் பாணி நன்றாயிருக்கிறது. விஜயப் பிரியா லலிதாவாக வருகிறார். ஊர்வம்புக்குப் பாலமாக இருந்து ஆங்காங்கு இணைப்புக் கொடுத்துச் சுவை சேர்ப்பவள் பட்டம்மி. கூத்தபிரான் பட்டம்மியாகச் சக்கைப் போடு போடுகிறார். ஒவ்வொரு தடவையும் கணக்குப் போட்டுக் குழம்பிக் கொள்ளும்போது நல்ல தமாஷ்! ''மெரீனா''வின் சுவையான உரையாடலே நாடகத்தின் உயிர்நாடி, கதையல்ல. அது இருந்தால்தானே? நாடகத்துக்குச் சற்று அழுத்தமான முடிவு இருந்திருந்தால் நல்லது என்று எனக்குப் பட்டது. நாடகம் மனதில் நிலைத்து நிற்க அது உதவியிருக்கும்.

- காந்தன்

## ஹன்ஸ்தே ஜக்ம்

சிரிக்கும் புண்கள் என்பது தலைப்பு. புண்கள் சிரிக்குமா? சமுதாயத்தில் புரையோடிவிட்ட புண், சமுதாயத்தைப் பார்த்துச் சிரிக்கத் தொடங்கிவிட்டால், அதைக் களைய முற்படுவது சமுதாயத்தின் இயல்பு. அந்தப் புண்ணைப் பச்சையாகக் காட்டிப் பணம் பண்ணப் பார்ப்பது......? திரையுலகத்தின் இயல்பு !

ஹன்ஸ்தே ஜக்ம் படத்தின் கதாநாயகி பிரியா என்னும் நடிகை. கதாநாயகிக்குத் தன் தொழிலில் வெறுப்பு : நியாயம். அப்பாத்திரத்தை ஏற்ற தோஷத்துக்காக, நடிகை வேண்டா விருப்பாக நல்ல வசனங்களையும் உருது மொழிக்கு ஏற்றம் தரும் 'ஷேர்'களையும் வெறுத்து ஒதுக்கிப் பேச வேண்டுமா ?

நவீன் நிச்சல் கதாநாயகன். மாசு படிந்த கதாநாயகியின் கரம் பற்றுவதற்கும் துணிந்தவன். ஆனால் படம் எடுத்தவர்களுக்குத்தான் அந்தத் துணிச்சல் இல்லை. கதாநாயகிக்கு முடிவு தேடித் தந்து பாரதப் பண்பைக் காப்பாற்றி விடுகிறார்கள். ஆனால் படத்தைக் காப்பாற்றக் காலஞ்சென்ற பால்ராஜ் ஸாஹ்னியின் நடிப்பு கை கொடுக்கிறது. நவீன் நிச்சலின் நடிப்பும் ஒத்துழைக்கிறது.

இதே கதைக் கருவை மையமாகக் கொண்டு பல படங்கள் வெளிவந்துள்ளதைப் பார்க்கும் ரசிகர்களில்,

சிலர் சிரிப்பார், சிலர் அழுவார்! - ரா. வீ.





# ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு

காந்தன்

பெரிய பணக்காரரான பரமசிவத்தின் சொத்துக்கு உரிமை, அவர் தம்பி, தம்பியின் மனைவி, தம்பியின் மகன், தம்பியின் மகள் ஆகியவர்களுக்கு இருக்கிறது. ஆனல் இவர்களில் யாருக்கு முதலில் ஒரு குழந்தை பிறக்கிறதோ அவர்களுக்குத்தான் அதைப் பெற உரிமை என்று ஓர் உயில் எழுதி வைக்கப்பட்டிருக்கிறது. அந்த உயில்தான் எல்லாரையும் பாடாய்ப் படுத்தி வைக்கிறது. (படம் பார்க்கிறவர்களையும்கூடத்தான்!) ஒவ்வொருவரும் தனக்கு ஒரு குழந்தை பிறக்காதா என்று ஏங்கித் தவிப்பது மிகவும் தமாஷாய்த்தான் இருக்கிறது. ஆனல் நகைச்சுவைக்காக உரையாடல்கள் விரசமாய்ப் போய் விடலாமோ!

இப்படத்தில் நல்ல நடிப்புக்கு, 'ஒண்ணே ஒண்ணு...' என்றிருப்பவர் டில்லி குமார். அவரால் திரையுலகத்துக்கு ஒரு புதிய தந்தை கிடைத்திருக்கிருர்.

மேடைப் புகழ் விஜயசந்திரிகா திரையிலும் தம்மால் சோபிக்க முடியும் என்பதை நன்கு நிரூபிக்கிருர்.

கதாநாயகி ஜெயசித்ரா மிகவும் இயல்பாகவும், உருக்கமாகவும் நடித்துக் கதாநாயகி



நடிகையாகத் தம்மை நிலைநிறுத்திக்கொண்டு விட்டார். சிவகுமாருக்குப் பார்வை இழந்தவனாக நடிக்க ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. அதில் தம் நடிப்புத் திறமையை நன்ருய் வெளிப்படுத்துகிருர்.

'சோ', மனேரமா இருவரும் தோன்றும் காட்சிகளில் கொட்டகையில் சிரிப்பு அலைகள் பொங்கிப் பெருகுகின்றன. 'சோ'வின் இரு பொருள் பொதிந்த சம்பாஷணைகள் எல்லோரையும் சிரிக்கவும் சிந்திக்கவும் வைக்கின்றன! கருணிராஜன் இவர்களோடு சேர்ந்திருப்பது மேலும் சுவை கூட்டுகிறது.

கே. எஸ். பாஸ்கர் ராவின் ஒளிப்பதிவு பாராட்டுப் பெறுகிறது.

ரா. சங்கரன் திரைக்கதை எழுதி, டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றிருக்கிருர். டைரக்ஷனுக்காக அவரைப் பாராட்டலாம். முழு நீள ஹாஸ்யக் கதை என்பதால் போனல் போகட்டும் என்று கதையை மன்னித்துவிடலாம்!

சுதர்சன் எண்டர்பிரைசஸ் தயாரிப்பான ''ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு'' அவ்விதம் போற்றிச் சொல்லும்படியாக இல்லை. பத்தோடு பதினென்று என்றுதான் கருதும்படியிருக்கிறது.

குடும்பக் கட்டுப்பாடு பிரசாரம்
தீவிர நிலையிலிருந்து
அதிதீவிர நிலைக்கு உயர்ந்தால்
படத்தின் தலைப்பு அதிகாரிகளுக்குக்
கைகொடுக்கும்!

# அழகிய நாணம் அளவோடு நிற்கட்டும்!

நங்கையர்க்கு நாணம் அழகு என்ற அளவில் சரி; ஆனால் அவர்களது ஆரோக்கிய வாழ்வுக்கு அச்சமும் கூச்சமும் தடையாக இருக்கக் கூடாது. நமது நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் ஆயிரக்கணக்கான பெண்கள் வெட்கம் காரணமாகவே எத்தனையோ உடல் வேதனைகளைப் பொறுத்துக் கொண்டு வருகின்றனர்; இயல்பான இடர்களை உடனுக்குடன் மருத்துவ உதவியுடன் களையாமல் முற்ற விட்டுவிட்டுத் தவிக்கின்றனர். இவற்



றுள் பலவும் தவிர்க்கக் கூடியவை, குணப்படுத்தக்கூடியவை.

மருத்துவம் தோன்றிய காலம் முதலே மகளிர் மருத்துவம் தனிப் பிரிவாக வளர்ந்து வருகிறது எனலாம். சென்ற நூற்றாண்டின் தொடக்கத்திலேயே பெண் உறுப்புநோய்களை ரண சிகிச்சையாலும் குணப்படுத்தும் முயற்சிகள் நடைபெற்றுள்ளன. பெண்களுக்கு வைத்தியம் பார்க்கும் பெண் டாக்டர்கள் எண்ணிக்கையும் இப்போது பெருகி வருகிறது.

## அலட்சியம் வேண்டாம்!

ஆயிரக்கணக்கான பெண் நோயாளிகளைக் கவனித்துச் சிகிச்சையளித்த நிபுணர்கள் பொதுவாகப் பெண்களுக்குத் தரும் முக்கிய ஆலோசனை ஒன்றே: 'உறுப்புக்களின் தொந்தரவு எதுவானாலும் அலட்சியமாக இருக்க வேண்டாம். வைத்தியரிடம் ஆலோசனை கேளுங்கள்' என்பதே அது.

□ அடுத்தடுத்துக் கர்ப்பம் தரித்தல் கெடுதலா? நாட்டுக்குக் கெடுதல் என்று அரசாங்கம் நினைக்கலாம். ஆனால் ஆரோக்கியமான பெண் கர்ப்பம் தரிப்பதாலோ பிரசவிப்பதாலோ உடல் நலம் குன்றுவதில்லை. பிரசவத்துக்குப் பிரசவம் மூன்று ஆண்டு இடைவெளியாவது இருப்பது நல்லது. இல்லையேல் கர்ப்பப்பை கீழே சரிய வாய்ப்புண்டு. இது தாயின் ஆரோக்கியத்துக்கு நல்லதல்ல. குழந்தையின் ஆரோக்கியத்துக்கும் நல்லதல்ல.

இளமைப் பருவம் தொடங்கும் போதே திருமணமாகி முப்பது வயதுக்குள் நாலைந்து குழந்தைகள் பெற்று, உடலிலும் உள்ளத்திலும் பொருளாதாரத்திலும் நலிந்து போவோர் பலர். இவர்களைக் காணுகையில், சற்று வயது வந்த பிறகே மணந்து கொள்வது நல்லது என்பது புரிகிறது.

பிரசவம் ஆன ஆறு வாரங்களில் உறுப்புக்கள் பழைய நிலைக்கு வந்துவிடும். ஆனால் அடிவயிற்றுச் சதைகள் சுருங்கிச் சீராக இருக்க, சில பயிற்சிகள் உண்டு. வைத்திய ஆலோசனையுடன் அவற்றைச் செய்து வருதல் நல்லது.

## வீட்டு வேலை உடற்பயிற்சி ஆகுமா?

□ பெண்கள் பலருக்கும் வரும் வழக்கமான ஒரு தொந்தரவு அடி முதுகு வலி. குனிந்து நிமிர்ந்து எவ்வளவு வீட்டு வேலை செய்தாலும் அவை யெல்லாம் உடலுக்குப் போதிய பயிற்சி ஆவதில்லை. மருந்து தவிர, மருத்துவர் யோசனையுடன் சில சுலபமான பயிற்சிகளும் செய்து வந்தால் நிவாரணம் பெறலாம்.

□ பெண்களுக்கு நேரக்கூடிய மற்றொரு சாதாரண இடர் சிறுநீர்ப்பை தொந்தரவுகள். யுரித்ரா என்னும் சிறுநீர்க் குழாயின் நீளம் ஆண்களைவிடப் பெண்களுக்குச் சிறிதாக இருப்பதாலேயே சில பாக்டீரியா புண் நேர அதிக வாய்ப்பு இருக்கிறது. எனவே, ''புறந்தூய்மை'' விஷயத்தில் அதிக கவனம் ஒரு நற்பழக்கமாகும்.

☐ மாதாந்திரத் தீட்டு மிகையானபோதும் கர்ப்பச் சிதைவு, பிரசவம் போன்ற காலங்களிலும் பலருக்கும் ரத்தத்தில் இரும்புச் சத்து குறைந்து போகக்கூடும். எனவே, சோகை பிடிக்கும். இதற்கு மாற்று, வைத்திய ஆலோசனையுடன் சீரான போஷாக்கு உணவும் மருந்துகளுமே.

☐ 'வெள்ளை போவது' மற்றொரு சகஜமான இடர். பெரும்பாலான சமயங்களில் இதனால் ஒன்றும் தவறில்லை என்றாலும் வைத்திய ஆலோசனையை நாடுவது நல்லது. இது நீடித்தால் போஷாக்குக் குறையால் அயர்ச்சலாக இருக்கும். கர்ப்பப் பை வாயில் புண் இருப்பதற்கும் இது ஓர் அடையாளமாகலாம். மின்சாரச் சூடு முதல் வேறு பல சிகிச்சை முறைகளாலும் இக்குறையைக் குணப்படுத்துவார்கள்.

## தாமதம் தரும் துயர்!

☐ கர்ப்பப் பை வாயில் புண் வருவது பல காரணங்களால் நேரக்கூடியது. கவனக் குறைவாலும் இடைவெளியின்றி அடுத் தடுத்துக் கர்ப்பச் சிதைவு உண்டாவதாலும் இந்த இடர் நேரும். முற்றவிட்டால் இது புற்றுநோயாகப் புரையோடிவிடுவதும் உண்டு. இந்த நிலையில் ரேடியக் கதிர் சிகிச்சையும் ரண சிகிச்சையும் கொண்டு ஓரளவு கட்டுப் படுத்தலாம் என்றாலும் தொடக்க நாளிலேயே கவனித்துச் சிகிச்சை செய்வதுபோல் ஆகாது. சாதாரணப் புண் ஆறுவதும் உடனுக்குடன் சிகிச்சை பெறவிட்டால் பெரிதாகி விட வாய்ப்புண்டு. எனவே, அரிப்பு தொடர்ந்த தொந்தரவாக நீடித்தால் வைத்தியரிடம் காட்டி விடுதலே விவேகம்.

☐ செயற்கையாகக் கர்ப்பச் சிதைவு செய்து கொள்வதை இன்று சட்டம் அனுமதிக்கிறது. இது சரியா, தப்பா என்ற வாதப் பிரதி வாதங்கள் இன்னும் ஓயவில்லை. எவ்வாறாயினும் குடும்பக் கட்டுப்பாடு கருதியோ வேறு மருத்துவ காரணம் கருதியோ வைத்திய பூர்வமான கர்ப்பச் சிதைவைச் செய்து கொள்பவர்கள் அதற்குப் பின் பல வார காலம் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியம்.

## முதுமையிலும் அழகு!

☐ பெண்கள் முதியவரானதில் ஓர் அழகும் கம்பீரமும் உண்டு. உடல் சதை போட்டு விடாமல் பார்த்துக் கொள்ள, உணவுப் பழக்கத்தில் கவனம் தேவை. சுறுசுறுப்புடன் இயங்கினால் மட்டும் போதாது. தேகப் பயிற்சியும் வேண்டும். ஏதாவது ஒரு காரணத்துக்காக வாரம் சில இரவுகள் விரதம் என்று உணவை ஒதுக்குவோர் ஆரோக்கியமாகவே இருக்கிறார்கள்.

வயதாக ஆக, தாய்மையின் தனி உறுப்பான மார்புகள் சுருங்கும். தசைப் பிடிப்பு குறையும்: இதே சமயம் சில பெண்களுக்கு அங்கே கட்டியோ புண்ணோ புறப்பட்டுப் புரையோடிப் போவதும் உண்டு. சங்கோசம் காரணமாகவே எத்தனையோ மாதர்கள் இந்தத் தொந்தரவை வெளியிடுவதும் இல்லை; வைத்திய உதவியை நாடுவதும் இல்லை. ரேடியம் சிகிச்சைக்கும் மீறிய நிலையில் உள்ள பலருக்குப் பெரும் ரண சிகிச்சை செய்ய வேண்டி வருகிறது. இவற்றுள் பலவற்றைத் தொடக்க நாளிலேயே எளிதில் குணப்படுத்தியிருக்கலாம் — தாமதமின்றிச் சிகிச்சையை நாடி வந்திருந்தால்.



புற்றுநோய் ஆராய்ச்சி நடக்கிறது. இடது புறத்தில் புற்று நோய் கட்டியுடன் எலியையும் வலது புறத்தில் மருந்து ஊசி போடும் விஞ்ஞானியையும் காணலாம். மேற்கு ஜெர்மனியில் இன்று மூன்று நபர்களில் ஒருவர் என்ற விகிதத்தில் புற்றுநோய் உடையவர்களாய் இருக்கிறார்கள். மரணங்களில் ஐந்தில் ஒன்று இந்நோய் காரணமாகத்தான்! எனவே புற்றுநோய் தோன்றுவதற்கான காரணங்கள், சிகிச்சை, தடுப்பு முறைகள் பற்றி விரிவான ஆராய்ச்சிகள் நடத்த அரசாங்கம் ஏராளமாய்ப் பணம் ஒதுக்கி யுள்ளது.

திருமணத்தின் முதலிரவு தொடங்கி மூதாட்டியாகும் வரை பெண்கள் அனுபவிக்கும் இன்பங்களும் தனி, இடர்களும் தனி. இன்பத்தில் நாணிக் கண் புதைப்பதுபோல, உடல் ஆரோக்கிய விஷயத்தில் சங்கோசப் படாமல் இருந்தால் போதும். ஆரோக்கிய சந்ததிக்கு ஆதாரமாக இருக்கலாம்.

ஆலோசனை: **டாக்டர் எம். கே. சரஸ்வதி**
கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

ஒரு முறை வாங்கினாலும்
எப்போதும் நீங்கள் பெருமைப்
படக்கூடிய விளக்கு மில்லர்.
அது நெடுங்காலம் வரையில்
ஒளி குன்றாமல், பளபளப்பு
மங்காமல் உழைத்து உங்கள்
செலவை மிச்சப்படுத்திய
வண்ணம் இருக்கும்.
ஏனெனில், திருட முடியாத
அமைப்பு கொண்ட மில்லர்,
25-மீட்டர் நீளமுள்ள பிரகாசமான
ஒளிக் கற்றையை வீசி பாதுகாப்பு
அளிக்கிறது. அதற்கு எண்ணெயோ,
பாட்டரியோ தேவையில்லை.
பராமரிப்பதும் எளிது துடைத்தால்
போதும். எனவே, அது செலவு
குறைவானது.
பாதுகாப்பானதும், செலவு குறை
வானதுமான மில்லர், கண்ணைக்
கவரும் வண்ண விளக்கும் கூட.
பளபளப்பான குரோம், மெரூன்,
நீலம் ஆகிய வண்ணக் கலவை
கொண்டது அது. 18 மாத
உத்தரவாதத்துடன் கிடைக்கிறது.

# மில்லர்

# உங்கள் முழு நம்பிக்கைக்குப் பாத்திரமானது





FDS TIM 2001 TAM

மில்லர்
எந்த சைக்கிளுக்கும்
எழில்
சேர்க்கிறது.



MILLER டி ஐ மில்லர் லிமிடெட்

அத்வைத பரமாசாரியர்களான ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் சர்வ சமய சமரச உணர்வினைப் போற்றுவதே போல் விசிஷ்டாத்வைத, சைவ சித்தாந்த ஆசாரிய மகாபுருஷர்கள் அருளிய ஸ்ரீமுகங்களைப் பெரியவர்களின் ஜயந்தி இதழான ஜூன் 2உ 'கல்கி'யில் வெளியிட்டிருந்தோம். தற்போது த்வைத மகா குரவர்கள், உளமார்ந்து அருளியுள்ள திவ்ய ஸ்ரீமுகத்தைப் பிரசுரித்து மகிழ்ச்சியை மும்மடங்காகப் பெருக்கிக் கொள்கிறோம்.]



**ஆ**தரிசத் துறவிகளுக்கு ஒரு ஜொலிக்கும் உதாரணமாகத் திகழ்கிறார்கள், தமது தவநெறி வாழ்வில் எண்பதாண்டுகளைப் பூர்த்தி செய்யும் காஞ்சி காமகோடி பீடத்து ஸ்ரீ சங்கராசாரியர்கள். உணவு, உடை முதலிய சாமானியத் தேவைகளைக்கூட உயிர் வாழ்வதற்குரிய அதமபட்சமாகவே குறைத்துக் கொண்டு, மிக மிக எளிமையாக வாழ்வதே சந்நியாசியின் லட்சணம் என்பது தர்ம சாஸ்திர விதி. ஆனால் துரதிருஷ்டவசமாக இன்று துறவிகளின் வாழ்விலும்கூடப் படாடோபம், கௌரவம் ஆகியன மையமான இடம் பெற்றிருப்பதே

# ஆதரிச சந்நியாசி

**பூஜ்ய ஸ்ரீ விச்வேச தீர்த்த ஸ்வாமிஜி**

**(பூஜ்ய ஸ்ரீ பேஜாவர் மடம், ஜகத்குரு ஸ்ரீ மத்வாசார்ய சம்ஸ்தானம், உடுபி)**

வழக்கமாகி விட்டிருப்பதைக் காண்கிறோம். இதைக் கண்டு அடியோடு வெறுப்புற்ற மக்கள், ''முற்காலத்தில் துறவிகள் மரத்தில் கமண்டலு வைத்திருந்தார்கள்; ஆனால் அவர்களது இதயங்கள் பொன்னாக இருந்தன. இன்றோ சந்நியாசிகள் பொற் கமண்டலத்தைக் கையில் தாங்கிவருகிறார்கள்; ஆனால் அவர்கள் உடம்புக்குள் தாங்கி வரும் இதயமோ மரத்துக் கிடக்கிறது'' என்று சொல்லும்படியாக இருக்கிறது. இந்தக் கூற்றுக்கு முற்றிலும் விதிவிலக்காக மரத்தாலான கமண்டலுவையும், பொன்னான இதயத்தையும் தரித்திருப்பவர்கள் ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்கள். உணவு, உடை, ஊர்தி, அன்றாட நடவடிக்கைகள் முதலிய அனைத்திலும் சந்நியாச தர்மத்தின் கடும் நெறிகளைக் கைக் கொண்டே அவர்கள் வெகுஜனங்களின் வணக்கத்தையும் பாராட்டுதலையும் பெற்றிருக்கிறார்கள். முதுமையையும் சரீர பலவீனத்தையும் பொருட்படுத்தாமல் பாதசாரியாகவே கிராமம் கிராமமாகச் செல்கிறார்கள்; மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ள மக்கட் குலத்திடமும் நெருக்கமான தொடர்பை வளர்த்துக் கொள்கிறார்கள்; அவர்களிடையே தெய்வ பக்தியையும், தர்மத்துக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் பான்மையையும் பரப்புகிறார்கள். இவ்வாறாக சந்நியாசியின் வாழ்வு, கடமை இவை குறித்துப் புதிய உணர்ச்சியைக் கிளர்ந்தெழச் செய்து துறவித் தருமத்தைக் காட்டுகிறார்கள். சுருங்கக் கூறின் அவர்கள் ஓர் ஆதரிச யதி.

ஸ்ரீ ஆசாரியர்களின் இரண்டாவது முக்கியமான திருப்பணி, சமய ஒற்றுமையாகும். பலவேறு சமயப் பிரிவுகளையும் உட்பிரிவுகளையும் சேர்ந்தோரிடையே ஸ்ரீ ஆசாரியர்கள் சகோதர நேசத்தையும், ஐக்கியத்தையும் படைத்துத் தந்திருக்கிறார்கள். இந்நாளில் சிலர் எல்லா ஹிந்துக்களுக்கும் மூல வேரான சநாதன வைதிக தர்மத்தின் அபிவிருத்தியை அலட்சியம் செய்துவிட்டு, தத்தம் பிரிவை



மட்டும் காப்பதிலேயே கவனம் செலுத்தி வருகிறார்கள். இவர்கள் மரத்தின் வேரில் நீர் வார்க்காமல் கிளைகளுக்கு மாத்திரம் நீர் தெளிப்பவர்களே! ஆனாலும் இப்படிச் செய்துவிட்டு மரத்திலிருந்து புஷ்பமும் பழமும் கிடைக்க வேண்டும் என்று எதிர் பார்க்கிறார்கள்! வேர் காய்ந்து போனால் கிளை எத்தனை காலம் வாழ முடியும்? இந்த உண்மையை உணர்ந்தவர்கள் ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்கள். அடிப்படையான வேத தர்மத்தைக் காக்கும் பொருட்டு த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைத, சைவ சித்தாந்த சம்பிரதாயத்தவரை எல்லாம் ஒன்று சேர்த்துச் செயலில் ஈடுபடுத்த அவர்கள் அரும்பாடுபட்டிருக்கிறார்கள். சமய சம்பிரதாயங்களிலும் சித்தாந்த ரீதியிலும் பேதங்கள் இருப்பினும், அனைவருக்கும் பொதுவான சில கருத்துக்களை அஸ்திவாரமாகக் கொண்டு வேத தர்மத்துக்காகப் பணி புரிய வேண்டும் என்று அன்பாக வற்புறுத்திச் சொல்லி வந்திருக்கிறார்கள். இது, சமயத் துறையில் சமாதான சக வாழ்வுக்காகச் செய்த திரமான பரீட்சை என்றே சொல்லலாம். எவ்விதச் சர்ச்சைகளையும் கிளப்பாத சமய இலக்கியங்களை அவர்கள் இயற்றியும், பரப்பியும் வந்திருக்கிறார்கள். பஜனை, நாம சங்கீர்த்தனம் முதலான சுலபமான சாதனங்களால் பொதுமக்களின் இதயத்தை ஆண்டவன்பால் திருப்பி யிருக்கிறார்கள். தமது வாழ்வின் எளிமையாலும், தாம் உபதேசிப்பதில் உள்ள அந்தரங்கசுத்தத்தாலும், தாம் செய்கிற பரம உத்தமமான காரியங்களாலும் அவர்கள் நம் நாட்டு மக்களின் கோடானு கோடியரின் இதயத்தைக் கொள்ளை கொண்டிருக்கிறார்கள்.

பல்லாண்டுகளாக அவர்களோடு உடன் பிறந்தோர் உணர்வோடு அத்தியந்த மாகப் பழகி வந்திருக்கும் கௌரவப் பேற்றை நான் பெற்றிருக்கிறேன். த்வைத, அத்வைத சித்தாந்திகள் என்ற வகையில், தத்துவ ரீதியில், எங்களுக்கிடையே மாறுபாடு இருப்பது வாஸ்தவமே. ஆயினும் இந்த மாறுபாடு எங்களது பரஸ்பர அன்புக்கும், மரியாதைக்கும் குறுக்கே ஒரு போதும் வந்ததில்லை.

என்னுடைய ஆக்கப் பணிகளுக்கு ஸ்ரீகாஞ்சி ஆசார்யர்களின் இந்த அன்பு எத்துணை ஊக்கமும் எழுச்சியும் அளித்திருக்கிறது என்பதை நன்றியோடும், பெருமிதத்தோடும் நினைவுகூர்கிறேன்.

ஆதரிசமான, பயன் நிறைந்த துறவற வாழ்வில் அவர்கள் எண்பதாண்டுகளை நிறைவிக்கும் இச்சந்தர்ப்பத்தில் யாம் எமது அடர்ந்த அன்பும் ஆழ்ந்த மரியாதையும் கலந்த வாழ்த்துக்களை ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்களுக்கு அளிக்கிறோம்.

## காதல் தலையணை!

அண்மையில் லண்டனில் ஒரு காதல் ஜோடியின் திருமணப் 'பொன் விழா' நடந்தேறியது.

ஜார்ஜ் என்பவரும் மேரி என்னும் பெண்மணியுமே தம்பதிகள்.

பொன் விழாவில் தம்பதி இருவரும் ஒரு தலையணையைத் தயாரித்தார்கள். தலையணையின் உறைக்குள் இலவம் பஞ்சு திணிக்கப்படவில்லை; டன்லப்பில்லோவும் இல்லை - மாறாக- ...

காதலர்கள் இருவரும் திருமணத்துக்கு முன்பு எழுதிக் குவித்துப் பத்திரப்படுத்தியிருந்த நூற்றுக் கணக்கான காதல் கடிதங்களைக் கிழித்து, பஞ்சுக்கும் பதிலாகத் திணித்து விட்டார்கள்!

'விக் என்டி'லிருந்து ஏ. சுவாமிநாதன்





"சீஸல்ட் வருவதற்குள் முன் எச்சரிக்கை நடவடிக்கையாக சென்னையில் உள்ள எல்லா டுடோரியல் காலேஜின் அப்ளிகேஷன் பாரங்களையும் தயாராக வாங்கி வச்சுட்டான் என் பிள்ளையாண்டான்!"

## கடவுள் சாப்பிடுகிறாரா?

நைவேத்தியம் செய்தால் சுவாமி எங்கே சாப்பிடுகிறார் என்று சிலர் கேலியாகக் கேட்கிறார்கள். நிவேதனம் என்றால் சுவாமியைச் சாப்பிடச் செய்வது என்று பொருளல்ல. 'நிவேதயாமி' என்றால் 'அறிவிக்கிறேன்' என்று பொருள். "ஈசனே, இந்த வேளைக்கு உன் கருணையினால் இந்த உணவு எனக்குக் கிடைத்திருக்கிறது" என்று கடவுளுக்குத் தெரிவித்துவிட்டு அவன் நினைவோடு உண்ண வேண்டும். பரமேசுவரனால் கொடுக்கப்பட்டதை அவனுக்குக் காட்டாமலேயே நாம் அனுபவித்தால் திருடர்களாவோம்.

- ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர்களின் சொற்பொழிவிலிருந்து கேட்டு எழுதியவர்:

நா. க. க. சரவணப் பிரபு.



# விண்ணும் மண்ணும்

கி.ராஜேந்திரன்



## 42. கண்மணிக் கண்கள்!

உலக சரித்திரம் இருவிதமான வீரத்தை நமக்குச் சுட்டிக்காட்டுகிறது. ஒன்று கொடூர சித்தத்துடன் இணைந்து சிறிது காலமே வாழ்ந்த வீரம். மற்றொன்று கலை உள்ளத்துடன் இழைந்து இன்றளவும் மக்கள் உள்ளத்தை விட்டகலாத வீரம். கலைப் பண்பு உடைய வீரர்கள் கருணையோடு வாளைப் பிரயோகித்தார்கள். கொடூர சித்தமுடைய வீரர்கள் வாளைக் காட்டி எதையும் விலை பேசினார்கள். நெப்போலியனிடமும், அலெக்ஸாந்தரிடமும், ராஜ ராஜ சோழனிடமும் நமக்கு ஏற்படும் மதிப்பும் மரியாதையும் செங்கிஸ்கானிடமும் ஹிட்லரிடமும் ஏற்பட்டுவிட முடியுமா என்ன?

ராஜபுதனத்து மன்னர்களின் பராக்கிரம உள்ளங்கள் போர்க்களத்தை நாடுவதோடு நின்றுவிடவில்லை. நூதனமான ஓர் ஓவியக் கலைப் பாணியை இன்று உலகமே போற்றி வியக்கிற அளவில் அன்றைக்கே பேணி வளர்த்தார்கள். எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னும் எட்டுத் திசைகளிலிருந்தும் ஏராளமான மக்கள் வந்து பார்த்து வியக்கும் வண்ணம் கட்டடக் கலையை வளர்த்தவர்கள் அவர்கள்.



அத்தகைய ராஜபுதனத்து அதிசயங்களை, அரண்மனைகளை, மாட மாளிகைகளை, கூட கோபுரங்களை, நீராழி மண்டபங்களை, எழில் தோட்டங்களை, செயற்கை நீரூற்றுக்களை, வண்ண ஓவியங்களைக் கண்டு களித்து, ரசித்த பிறகு புது தில்லிக்குப் பறந்தனர் அனுபமாவும் மைக்கேலும்.

முன்னமேயே டெலிஃபோன் தொடர்பு கொண்டிருந்ததால் அவர்களை வரவேற்கத் தனஞ்செயன் தங்கை சாந்தியுடன் விமான நிலையத்துக்கு வந்துவிட்டான். ''நான் எதற்கு?'' என்ற அவளுடைய நியாயமான கேள்வியை ஒதுக்கித் தள்ளிவிட்டு வற்புறுத்தி அழைத்து வந்தவன், இப்போது அவளைக் கேலி செய்யவும் ஆரம்பித்துவிட்டான்.



''ஸெண்ட் வாசனை ஆளைத் தூக்கி அடிப்பதாய் இருக்கிறதே! நான் வாங்கி வந்ததா?''

''அதேதான் அண்ணா! சானல்-5.''

''மைக்கேலுக்கு ரொம்பப் பிடித்தமான ஸெண்ட்'' என்றான் தனஞ்செயன். ''உன் ஃபோட்டோவைக் கண்டே அசந்து போனான் அவன். இப்போது நேரில் பார்த்தால் கேட்கவே வேண்டாம். சொக்கிப் போய்த் தலை கிறுகிறுக்கச் சாய்ந்தாலும் ஆச்சரியப்பட மாட்டேன்!''



''போ, அண்ணா! உனக்கு அனுபமாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேணுமானால் தாராளமாய்ச் செய்து கொள். நான் குறுக்கே நிற்கவில்லை.

அப்பா, அம்மாவிடம் சொல்ல உனக்கு வெட்கமாயிருந்தால் நான் வேணு மானால் தூது போகிறேன். ஆனால் அதற்காக மைக்கேலை வலுக் கட்டாய மாக என் தலையில் கட்ட நினைக்காதே'' என்றாள் சாந்தி.

''இப்போது அப்படித்தான் சொல் வாய். இரண்டு நாள் மைக்கேல் உன் னிடம் பழகிய பிறகு, அவன், 'டார்லிங் வில் யூ மேரி மீ?' என்று கேட்டு, தேன் நிலவுக்கு ஜெனிவா போகலாம் என் றும் யோசனை கூறினால் அப்போது நீ மறுத்துவிடப் போகிறாயா பார்க்க லாம்!''

சாந்தியின் சந்தியா காலத்துப் பொன்னிற முகம், அந்தி வானத்தின் செந்நிறமாக மாறியது. அதை மறைக்க முயன்று, ''அதோ விமானம் இறங்கு கிறது'' என்று கூறியபடியே நடந் தவள், ''தத்துப் பித்துப் பேச்சையெல் லாம் மூட்டை கட்டி வை!'' என்றாள்.

''தத்துமில்லை; பித்துமில்லை. எல்லாம் சத்தான இடம்தான்'' என்றான் தனஞ் செயன். ''என்ன அழகு! ஆண்மை! கம்பீரம்! பணம் காசுக்கும் ஒன்றும் குறைவில்லை. மில்லியனர் இல்லாவிட் டாலும் பசையுள்ளவன் மைக்கேல். நீயும்தான் ஆங்கில இலக்கியம்தவிர ஃபிரெஞ்சும் ஜெர்மனும்கூடப் படித் திருக்கிறாய். உனக்குத் தெரிந்த நாலு மொழிகளிலும் உள்ள வார்த்தைகள் காணாது உன் அழகை வர்ணிக்க. அவனுக்கு இணையாகப் பேசிப் பழகக் கூடியவள். அதே சமயம் அவன் விரும்பி எதிர்பார்க்கும் அடக்கமும் உடையவள். பிறகு என்ன? எல்லாவிதத்திலும் பொருத்தம்தான்.''

அவள் அண்ணனை வியப்போடு பார்த் தாள். ''நீ ஏதோ விளையாட்டாகக் கேலி செய்து கொண்டிருக்கிறாய் என்று நினைத்தேன். ஆனால் இப் போது நிஜமாகவே நீ இந்தச் சம் பந்தத்தை விரும்புகிறாய் என்ப தாகத் தோன்றுகிறது.''

''என் தங்கையின் எதிர்காலம் பிரமாதமாயிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுவதில் தவறு என்ன சாந்தி?''

''ஒரு தப்புமில்லை, ஆனால் நீ இப்போது திட்டம் போடு வது என் நலனைக் கருதியா, அல்லது சுயநலனை யொட் டியா என்பது மட்டும் தெளி வாக வேண்டும்!''

''இரண்டும்தான் என்று வைத்துக் கொள்ளேன்!''

சாந்திக்குப் புரிந்து விட்டது. மைக்கேலுக்கும் அனுபமாவுக்கும் இடை யில் இருந்த ஒருதலைப்பட்சமான காத லைப் பற்றி ஏற்கனவே அண்ணன் கூறக் கேட்டிருந்ததால் சாந்திக்கு அவன் மனப்போக்குத் தெளிவாகியது. மைக் கேல் மனம் மாறிச் சாந்தியை விரும்பத் தொடங்கினால் பின்னர் தனஞ்செயன் அனுபமாவை அடைவது எளிதாகும் என்றல்லவா திட்டம் போடுகிறான் இவன்!

சாந்தி சிரித்துக் கொண்டே அண்ண னுடன் நடந்தாள். எவ்வளவோ கெட் டிக்காரன் என்று தான் எண்ணி வந்த அண்ணன், காதல் வயப்பட்டதும் இப் படி அசடாகிவிட்டானே என்ற எண் ணம் அவளைச் சிரிக்கச் செய்தது. காதல் என்பது இவனது இஷ்டத்துக்கும் வசதிக்கும் ஏற்ப வளைந்து கொடுக்கக் கூடிய ஒன்றா? 'சூ! மந்திரக்காளி!' என்று இவன் சொன்னதும் தோன்றி 'ஹ்ரீம் ஹராம்!' என்றதும் மறைந்து விடுமா அது? என்ன முட்டாள்தனம்!

''அண்ணா! மனக்கோட்டைகள் கட் டாதே! அவை மணல் கோட்டை களாகிச் சரிந்தால் உன்னால் தாங்க முடியாது!''

''சரிய விடமாட்டேன், பலமாக அஸ்திவாரம் போட்டிருக்கிறேன். மைக் கேலை உனக்கு அறிமுகப்படுத்தும்போது பட்டிக்காடு மாதிரி கை கூப்பாதே.



கைநீட்டி அவன் கரம் பற்றிக் குலுக்கு! சரிதானா ?''

''உடனே அவர் மேனி சிலிர்க்கும்;என் உடலில் மின்சாரம் பாயும்! இல்லையா அண்ணா! கதைகளிலும் நாவல்களிலும் அதுதானே காதலுக்கு முதல் அறி குறி?'' இப்படிக் கேட்டுவிட்டு அடக்க மாட்டாமல் சிரித்தாள் சாந்தி அண்ண னின் அப்பாவித்தனத்தை எண்ணி. 'பாவம், அண்ணாவுக்குக் காதல் பித்து தலைக்கேறித்தான் விட்டது!''

ஆனால் மைக்கேலைப் பார்த்ததும்—அவன் கண்களைச் சந்தித்த மறுகணம்-அண்ணன் எதிர்பார்ப்பது போலவே நடந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று கருத ஆரம்பித்தாள் சாந்தி !

அவள் சந்தித்துப் பேசியுள்ள எத் தனையோ மேல் நாட்டு நபர்களைப் போல் மைக்கேலை அவளால் எண்ண முடிய வில்லை. இந்தியாவின் உஷ்ணத்தைத் தாங்க முடியாமல் வேறு பல வெள்ளைக் காரர்களின் வெளிறிய தோலில் செம்மை படர்ந்ததுபோல்தான் மைக் கேலின் உடலும் காணப்பட்டது. ஆனால் இவன் தலைமயிர் செம்பட்டை யாக இராமல் கரேல் என்றிருந்தது. அப்புறம் அந்தக் கண்கள் ! கருகரு வென்று வளர்ந்திருந்த புருவங்களுக்குக் கீழே அடர்த்தியான நீண்ட இமை மயிர் களுக்கு இடையில் வளைய வந்தன வட்டக் கரு விழிகள்.

விழிகளிலே உள்ள காந்த சக்தி என்பதாக எத்தனையோ படித்திருக் கிறாள், கேள்விப் பட்டுமிருக்கிறாள் சாந்தி. ஆனால் அதனை இதற்கு முன்பாக ஒரே ஒரு முறைதான் அவள் உணர்ந்து அனுபவித்திருக்கிறாள். அது டைரான் பவர் நடித்த பழைய படம் ஒன்றை அவள் பார்க்க நேர்ந்தபோது. 'பவர்' என்று பெயர் கொண்ட அந்த நடிக ரின் சக்தி முழுவதும் அந்தக் கண்களி லேயே குடிகொண்டு இருப்பதாக அவ ளுக்கு அப்போது தோன்றியது. தன் உடலில் உள்ள சக்தியையெல்லாம் அந்தக் கண்கள் உறிஞ்சி எடுத்துத் தமக் குரிய கவர்ச்சிச் சக்தியாக மாற்றிக் கொள்வதாகப்பட்டது. தன் உடல் பலவீனமுற்றுத் தொய்ந்து அடிக்கடி பெருமூச்சுக்களை வெளிப்படுத்துவதை அருகில் இருந்த அவள் தாயார் வினா எழுப்பிய போதுதான் உணர்ந்தாள் சாந்தி.

''என்ன இப்படி புஸ்ஸு புஸ் ஸுன்னு பெருமூச்சு விடறே? உடம்பு ஏதாவது சரியில்லையா ?''

அதன் பிறகு அவள் எச்சரிக்கை அடைந்து பெருமூச்சுக்களை வெளிப் படுத்தாமல் இருக்கப் பிரயத்தனம் செய் தாள். படம் முடிவதற்குமுன் இரண்டு மூன்று தடவை அம்முயற்சியில் தோல்வி யும் அடைந்தாள் !

திரைப்படக் கதாநாயகர்களுள் சக் கரவர்த்தியாக ஒரு காலத்தில் விளங்கிய டைரான் பவருக்கும் இன்றைய விண் வெளி விஞ்ஞானி மைக்கேல் டேவிஸுக் கும் இடையில் அறிவாற்றலிலும்தோற் றத்திலும் நடையுடை பாவனைகளிலும்



மனப் போக்கிலும் எத்தனையோ வித்தியாசங்கள் இருக்கலாம். ஆனால் அந்தக் கண்களில் கொஞ்சம்கூட வேற்றுமையில்லை என்று கருதினாள் சாந்தி. அந்தக் கண்கள் அகன்றவை, சதா சிரித்துக் கொண்டிருப்பவை, ஒளி மிக்கவை, ஆழ்ந்து நோக்கினும் ஆராய்ச்சிக்கு அகப்படாதவை, ஊடுருவி நோக்கி உள்ளத்தைப் பறிப்பவை !

சாந்தியை ஒருமுறை பார்த்துவிட்டு அந்தக் கண்கள் தனஞ்செயன் பக்கம் திரும்பிவிட்டன. ஆயினும் சாந்தியால் அந்தக் கண்களை விட்டுத் தன் விழிகளை அகற்ற முடியவில்லை !

'இந்த நயனங்களின் ஆகர்ஷண சக்திக்குக் கட்டுப்படாமலும் ஒரு பெண்ணால் இருக்க முடியுமா? அப்படி இந்த அனுபமா இருக்கிறாளாமே! மைக்கேலைத் தான் காதலிக்கவில்லை என்பதாக அவரிடமே கூறுகிறாளாமே! இவள் என்ன மனுஷிதானா அல்லது அரக்கியா?'

அனுபமா மைக்கேலை விரும்பவில்லை என்பதற்காகச் சந்தோஷப்படுவதற்குப் பதில் சாந்தி அவள் மீது கோபமடையவே ஆரம்பித்தாள் ! 'அது எப்படி இரட்டைக் கண்மணிகளான இந்தக் கண்களின் எழிலுக்குக் கட்டுப்படாமல் இருக்கலாம்' என்பதாக எண்ணினாள்! தன் மனத்தின் இந்த விசித்திரப் போக்கு கண்டு அவளே வியப்பும் திகைப்பும் அடைந்து மிரண்டாள் !

# 43. அரும்புக் காதல்!

"புதுதில்லியைவிட்டு நாம் எவ்வளவு சீக்கிரம் கிளம்புகிறோமோ அவ்வளவுக்கு நல்லது" என்றாள் அனுபமா.

மைக்கேல் இந்தப் புதிரை விடுவித்துக் கொள்ள முடியாமல் அவளை நெற்றி சுருங்க நோக்கினான்.

இரவு படுக்கப் போகுமுன் தன்னுடன் சேர்ந்து ஒரு 'நைட் கேப்' அருந்த வேண்டும் என்று மைக்கேல் கேட்டுக் கொண்டதன் பேரில் அவள் அவனுடன் அசோகா ஹோட்டலின் 'மொகல் ரூமி'ல் அமர்ந்திருந்தாள். இவனுக்குச் சின்னதாக ஒரு பிராண்டியும் அவளுக்கு ஷெர்ரியும் மேஜையின் மேல் இருந்தன.

அன்று அவர்கள் குதுப்மினாரையும் ஜந்தர்மந்தரையும் செங்கோட்டையையும் ஜும்மா மசூதியையும் சுற்றிப் பார்த்துவிட்டு, இரவு தனஞ்செயன் வீட்டில் 'பஃபே' விருந்தையும் ஏற்றுக் கொண்டு பசமும் வயிறும் நிரம்பத் திரும்பியிருந்தார்கள் ஹோட்டலுக்கு. அதே சமயம் நாள் முழுவதும் அலைந்து திரிந்ததால் உடல்கள் வெகுவாகக் களைத்துப் போயிருந்தன. ஆயினும் அனுபமாவுடன் தனித்துப் பேசும் சந்தர்ப்பமே அன்று அகப்படவில்லையாதலால் படுக்கையில் விழுமுன் பத்து நிமிஷங்களாவது அவளுடன் உரையாட ஆசைப்பட்டான் மைக்கேல். "தனஞ்செயனும் அவன் தங்கையும் சதா கூடவே இருந்தார்கள். சில நிமிஷங்களாவது உன்னுடன் மனம் விட்டுப் பேசாது போனால் எனக்குத் தூக்கமே வராது" என்றான் மைக்கேல்.

அப்போதுதான் அவள் சொன்னாள், "புதுதில்லியிலிருந்து சீக்கிரமே புறப்படுவது நல்லது" என்று.

"ஏன்? இந்த நகரம் பிடிக்கவில்லையா உனக்கு?"

"புதுதில்லி, பழைய தில்லி எல்லாமே பிடித்துத்தான் இருக்கிறது."

"பிறகு?.... ஒரு வேளை தனஞ்செயன் ஏதாவது தொந்தரவு கொடுத்தானா? நான் பார்த்தவரை அப்படியொன்றும் தோன்றவில்லையே ?"

"நீங்கள் நிஜமாகவே கவனிக்கவில்லையா? அல்லது தெரிந்தும் தெரியாத மாதிரி நடிக்கிறீர்களா ?"

"நான் கவனிக்கா விட்டாலும் பாதகமில்லை அனு! எனக்கு என் தூய காதலின் சக்தியில் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. உன்னை என்னிடமிருந்து கடவுளால்கூடப் பிரிக்க முடியாது என்ற அளவுக்கு உறுதியாயிருக்கிறேன்."

அனுபமா சிரித்தாள். "இப்போது நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. உங்களை என்னிடமிருந்து பிரிக்க முயற்சி நடக்கிறது !"

"அனு ! நீ என்ன சொல்கிறாய்?"

"இன்னமும் புரியவில்லையா? அப்படியானால் இந்தக் கற்பாறை மனத்தை அசைக்கப் பார்க்கும் சாந்திக்காகப் பரிதாபப்பட வேண்டியதுதான்."

"அனு, என்ன உளறுகிறாய்?"

"நாளை சற்றுக் கவனம் செலுத்திப் பாருங்கள். உங்கள் கண்களை அவள் ஏக்கத்தோடு ஏறிட்டு நோக்கிவிட்டு ரகசியமாகப் பெருமூச்சுக்கள் விடுவது தெரியும் !"

"அப்படியா சொல்கிறாய்! பஹுத் அச்சா!" என்று தான் புதிதாகக் கற்றுணர்ந்த இரண்டு ஹிந்தி வார்த்தைகளைப் பயன்படுத்தினான் மைக்கேல். "அவ்வாறானால் நாம் அவசரப்பட்டுத்

# பள்ளி செல்லும் குழந்தைகளின் பாதுகாப்பைப் பற்றி இனி கவலை வேண்டாம்.

சிறு குழந்தைகளை வண்டியில் ஏற்றி ஓட்டிச் செல்வது எளிதல்ல. ஓட்டுபவருக்குப் பொறுப்பும் அதிகம், கவலையும் அதிகம். நினைத்தவுடன் வண்டியை நிறுத்த, பாதுகாப்பான பிரேக் அமைப்பு அவருக்கு மிகவும் தேவை. காற்றழுத்த பிரேக்குகள் அவரது வேலையை எளிதாக்குகின்றன.

காற்றழுத்த பிரேக்குகள் இப்பொழுது உலகெங்கும் உபயோகிக்கப்படுகின்றன. அவை திறன் வாய்ந்தவை. சட்டென்று இயங்குபவை. இயக்குவதற்கும் எளிதானவை. எனவே காற்றழுத்த பிரேக்குகள் அதிக நம்பகமானவை, பூரணப் பாதுகாப்பானவை.

இந்தியாவில் தயாராகும் நவீன கமர்ஷியல் மற்றும் ஹெவி வண்டிகளில் — பஸ்கள், லாரிகள், டிரெய்லர்கள், டிராக்டர்கள், எர்த் மூவர்கள் ஆகியவற்றில் — காற்றழுத்த பிரேக்குகளே பொருத்தப்பட்டுள்ளன.

CD-TVS ஃபுல்-ஏர் மற்றும் ஏர்-அஸிஸ்ட் பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களையும், அவற்றுக்கான அசல் உதிரி உறுப்புகளையும் தயாரிக்கிறார்கள்.




சாலைப் பாதுகாப்புக்கு
ஒரு சின்னம்

**சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட்**
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை 600 050

தில்லியிலிருந்து புறப்பட வேண்டியதில்லை; நிதானமாகக் கிளம்பலாம்'' என்றான் குறும்புச் சிரிப்புடன்.

''அதாவது அவள் உங்களைக் காதலிப்பதைக் கண்டு என் மனத்தில் பொறாமை உருவாகும். அது உங்கள் மீது ஆழ்ந்த காதலாகப் பரிணமிக்கும் என்று எதிர்பார்த்துப் பயணத்தை ஒத்திப்போட நினைக்கிறீர்கள்!'' அனுதாபப் புன்னகை அனுபமாவின் அதரங்களில் அலர்ந்தது.

''பரீட்சையின் முடிவு வேறு விதமாகவும் அமையலாம். உன் மனத்தில் பொறாமையை உருவாக்குவதற்காக அவளை நான் காதலிப்பதாக நடிக்கப் போய், மெய்யாலுமே அவளை நான் விரும்பத் தொடங்கி விடலாம், இல்லையா?'' என்றான் மைக்கேல் கண் சிமிட்டலுடன்.

''மூன் ஏஜ் வாசகர்களுக்காகக் கதாசிரியர்கள் பயன்படுத்தும் உத்தி'' என்றாள் அனுபமா ஏளனம் எட்டிப் பார்க்க. பின்னர் அவன் கரத்தைப் பற்றிக் கொண்டு கூறினாள்:

''இதோ பாருங்கள், உங்களைக் காதலனாக, கணவனாக ஏற்க என் மனம் இன்னும் பக்குவப்படவில்லை என்பது உண்மைதான். ஆனால் அதற்காக என்னை நானே ஏசிக் கொள்ளாத நாளும் கிடையாது. இந்த என் மனப் போக்கை உங்களால் புரிந்து கொள்ள முடியுமா என்பதே எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

''உங்களைக் காதலிக்கவில்லையே தவிர உங்கள் உள்ளத்தை என்னைக் காட்டிலும் நன்றாக அறிந்து கொண்ட வேறு ஒரு ஜீவன் இந்த உலகிலே இருக்க முடியாது. அந்தத் தைரியத்தில் சொல்கிறேன். உங்கள் மனம் ஒரு போதும் சாந்தியை ஏற்காது. அவ்வாறிருக்கச் சாந்தியிடம் ஒரு விஷப் பரீட்சையில் இறங்காதீர்கள்! அதனால் என் மனம் பொறாமை கொண்டு பின்னர் காதலால் கசிந்து உருகுகிறதோ இல்லையோ, உங்களால் ஏய்க்கப்பட்ட சாந்தியின் உள்ளம் ஆயிரம் சுக்கல்களாகி விடும். மலர்ந்து மணம் பரப்ப வேண்டிய ஒரு மொட்டு உள்ளம் கருகிச் சாம்பலாகிவிடும்.''

''உண்மைதான் அனு! நான் வெளியிட்டது அசட்டுத்தனமான யோசனைதான்.''

''விளையாட்டாகத்தான் நீங்கள் பேசினீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்'' என்றாள் அனுபமா.

''சாந்தி என்னிடம் மயங்குகிறாள் என்பதாகக் கண்டுபிடித்துச் சொன்னாயே, அவளுடைய இந்தப் போக்குக்குத் தனஞ்செயனின் தூண்டுதலும் இருந்திருக்குமோ?''

''கண்டிப்பாக அப்படித்தான் இருக்கும். என்னை அடைவதற்கு ஓர் உபாயமாகத் தங்கையை உங்களுக்கு வலை வீசுமாறு ஏவியிருப்பான். அவள் உள்ளத்தில் ஏதேதோ நம்பிக்கைகளை வளர்த்திருப்பான்.''

''இது போன்ற விஷயங்களைப் பெண்கள் உணர்ந்தறிகிற வேகத்தில் ஆண்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை'' என்ற மைக்கேல் பிராண்டியைக் குடித்து முடித்து விட்டு எழுந்தான். ''நீ சொல்வது போல் நாம் சீக்கிரம் ஆக்ராவுக்கும் அங்கிருந்து காசிக்கும் பிரயாணமாவது நல்லதுதான்'' என்று கூறியவாறு அனுபமாவுடன் அவள் அறைக்கு நடந்தான்.

வாசலில் ஒரு நிமிஷம் தாமதித்து, அவள் முகத்தை இரு கரங்களிலும் ஏந்திக் கண்ணோடு கண் சேர்த்துக் கூறினான்: ''அனு! ஆக்ராவில் தாஜ் மஹாலை நிலவொளியில் பார்க்கும் போது என் மனத்தில் நான் உனக்கு எழுப்பியுள்ள காதல் மாளிகையையும் காண முயற்சி செய்வாயா?''

கன்னங்களை அள்ளிய கரங்களில் அவள் கண் புதைத்துச் சொன்னாள்: ''என்மீது உங்களுக்கு உள்ள அளப்பரிய அன்பை நான் உணராதவளல்ல. ஆனால் அந்த ஜ்வாலையை ஏற்றுத் தாங்கக் கூடிய அளவில் என் உள்ளத்

## நீளத்திலும் நீளம்!

26-5-74 கல்கி இதழில் மிக நீளமான ஆங்கில வார்த்தை என்பதாக ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. ஆயின் அதைவிடவும் நீளமான வார்த்தை உண்டு. டாக்டர் ஸ்ட்ரோதர், பிரிஸ்டலில் உள்ள சுனையின் நீரில் இருக்கும் ரசாயன அம்சங்களை விவரிக்க இந்த ஐம்பத்திரண்டு எழுத்துள்ள வார்த்தையைப் பயன்படுத்தினார். அது பின் வருமாறு:

**'AEQUEOSALINOGALGALINOSETACEOALUMINOSOCUTREOVITRIOLIC'**

ஆதாரம்: கிரேட் லிஃப்கோ டிக்ஷனரி

தகவல்: ஆர். வீரராகவன்






திலும் ஒரு தாபத் தீ கொழுந்து விட்டெரிய வேண்டாமா? அந்த ஒரு நாளுக்காகத்தான் காத்திருக்கிறேன். அந்தத் தினம் விரைவில் வரவேண்டும் என்று பிரார்த்திக்கவும் செய்கிறேன். நெருப்பு நெருப்போடு இணைவதுதானே சாத்தியம்? வேறு விதமான சேர்க்கை விபரீதமாகவல்லவா முடியும்?''

மைக்கேல் ஒரு பெருமூச்சு விட்டான். ''எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது அனு'' என்று கூறிப் பிரிந்து பக்கத்திலிருந்த தன் அறைக்குச் சென்றான்.

* * *

விரைவில் புறப்படுவது என்று தீர்மானித்து விட்டார்களே ஒழிய அதனை நிறைவேற்றுவது அப்படியொன்றும் சுலபமாக இருக்கவில்லை.

''உங்கள் பயணத் திட்டத்தில் டில்லிக்கு என்று ஒதுக்கியிருக்கும் நாட்கள் போதவே போதாது என்று நான் சண்டை பிடிப்பதாக இருக்கிறேன். நீங்கள் என்னடாவென்றால் நாளையே புறப்படுகிறோம் என்கிறீர்களே?''—கார் ஓட்டியபடியே தனஞ்செயன் மனத்தாங்கலுடன் கேட்டான்.

''நான் அவசரப்படுவதற்கு முக்கிய காரணம் இருக்கிறது, தனஞ்செயன்!'' என்று மைக்கேல் பின் ஸீட்டிலிருந்து பேசினான். அவன் அருகில் சாந்தியும் தனஞ்செயனுக்குப் பக்கத்தில் அனுபமாவும் அமர்ந்திருந்தார்கள்.

''என்ன காரணம்?''

''அதை நான் சொல்வதற்கில்லை; நீயாகவே புரிந்து கொள்வதிலும் சிரமம் இல்லை.''

''நான் ஒருத்தி உங்களுடன் போகுமிடத்துக்கெல்லாம் வந்து கொண்டிருப்பதுதான் அந்தக் காரணம் இல்லையா?'' என்றாள் சாந்தி. ''அண்ணா! என்னை இங்கேயே இறக்கி விட்டு விடு. நான் பஸ் பிடித்து வீட்டுக்குத் திரும்பிப் போய்க்கொள்கிறேன். என் பொருட்டு யாரும் சங்கடத்துக்குள்ளாக வேண்டாம்.''

''சாந்தி! இது என்ன அசட்டுத்தனம்? நீ எங்கள் பின்னோடு வருவதில் எங்களுக்கு என்ன ஆட்சேபணை இருக்க முடியும்?'' என்று அனு திரும்பிப் பார்த்துக் கூறியபோது சாந்தி விம்மி விம்மி அழுது கொண்டிருப்பது கண்டு திடுக்கிட்டாள்.

டைரான் பவருக்கு அடுத்தபடியாக அந்த இளம் உள்ளத்தில் ஒரு சலனத்தை முதன் முதலாக ஏற்படுத்தியவன் மைக்கேல். முன்னவன் எட்டாக் கனி, வெறும் நிழற்படம் என்பதைச் சாந்தி அறிந்தேயிருந்தாள். ஆனால் பின்னவனோ, அவள் கண்ணெதிரே காந்தியோடு ஜொலித்துக் கொண்டிருந்தான். அவள் அண்ணனும் அவனை அடைவது சாத்தியமே என்பதாக நம்பச் செய்திருந்தான். கமலக் கண்கள் அவனைக் கருணையோடு பார்த்தபோது அவள் கரைந்துருகிக் கனவுலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தாள்.

ஆசைத் தீயைக் காட்டுத் தீயாக வளர விட்டு விட்டால் பிறகு அதை அணைப்பது சிரமம் என்பதை உணர்ந்து செயல்பட்டான் மைக்கேல். அந்தக் கோமள இதயத்தைக் காயப்படுத்திடுவோம் என்பது அவனுக்குத் தெரியாதது அல்ல. ஆயினும் இப்போது வாங்கும் அடியின் வேதனை சீக்கிரமே ஆறிவிடும். சாந்தி வெகு விரைவில் இந்த அரும்புக் காதலை மறந்து, தனக்கேற்ற ஒரு மணாளனைத் தேர்ந்தெடுத்துக் கொள்வாள். அப்போது மெய்யான காதல் மலர்ந்து மணம் பரப்பும். குழந்தை குட்டிகளைப் பெற்றெடுத்துச் சந்தோஷமாக வாழும் காலத்தில் இன்றையச் சம்பவத்தை என்றாவது ஒரு நாள் நினைத்துக்கொள்வாள். அப்போது, 'எவ்வளவு அசட்டுத்தனமாக அன்றைக்கு நடந்து கொண்டோம்' என்று எண்ணிச் சிரித்து முகம் சிவப்பாள்!

பரிவும் பாசமும் பொங்க மைக்கேல் தன் கைக்குட்டையை எடுத்துத் தந்தான் சாந்தியிடம். அதை வாங்கி மை கலையாதவாறு கண்களில் ஒற்றி எடுத்தவள், பின்னர் திருப்பித் தரவேயில்லை!

அது அவள் நெஞ்சோடு உறவாடச் சென்றுவிட்டது என்பதை மைக்கேல் கவனித்தான். வெகு காலத்துக்குப் பிறகு, மைக்கேலின் நினைவு மங்கிய நிழலானதற்கு அப்புறமும் கூடத் தன் உள்ளத்தில் துளிர்த்த முதல் காதலின் ஞாபகார்த்தமாக அவள் அந்தக் கைக்குட்டையைப் பத்திரமாக வைத்திருப்பாள் என்பது அவனுக்குப் புரிந்தது.

(தொடரும்)

# க்ரோஷே நீங்கள் நினைப்பதைவிடச் சுலபமானது...

## கோட்ஸ் ஆங்கர் நூல்கள் உங்கள் க்ரோஷே பின்னல் வேலைக்குக் கவர்ச்சியூட்டி, நீடித்து நிற்கச் செய்கின்றன!

ட்ரே செட்டுகள், நாற்காலி உறைகள், படுக்கை விரிப்புகள் போன்ற வீட்டுச் சாமான்கள் முதல் அதி நாகரிகமான உடைகள் மற்றும் துணைப் பொருள்கள் வரை பல பொருள்களை நீங்கள் க்ரோஷேயில் அழகாகப் பின்னிக்கொள்ளலாம். கோட்ஸ் ஆங்கர் க்ரோஷே நூல்கள், பளபளப்பு மங்காத, கெட்டிச் சாயம் தோய்த்த அழகான பற்பல வர்ணங்களில் வருகின்றன. உங்கள் க்ரோஷே வேலைப் பாடமைந்த அழகான பொருள்கள் எல்லாம் பல சலவைகளுக்குப் பிறகும் புத்தம் புதுத் தோற்றமுடன் திகழும். உங்கள் தேவைகளுக்கேற்ப அமைத்துக் கொள்ளக் கூடிய பற்பல வசீகரமான டிசைன்கள் கோட்ஸ் பிரசுரங்களில் கொடுக்கப் பட்டுள்ளன. நீங்கள் புதிதாகக் க்ரோஷே கற்றுக் கொள்பவராக இருந்தால் உங்களுக்கெனவே உள்ளது "லேர்ன் டு க்ரோஷே" என்னும் புத்தகம். உங்கள் பிரதியைப் பெற அடியில் காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து தபாலில் சேருங்கள் அல்லது தேவையான பேட்டர்ன் புத்தகங்களையும், கோட்ஸ் ஆங்கர் க்ரோஷே நூல்களையும் தேர்ந்தெடுக்க அருகாமையில் உள்ள கோட்ஸ் வியாபாரியிடம் செல்லுங்கள்.

Grant.21.TM




தயவு செய்து உங்கள் "லேர்ன் டு க்ரோஷே" புத்தகத்தை எனக்கு அனுப்பவும். இத்துடன் ரு. 3/-க்கு போஸ்டல் ஆர்டர் அனுப்பியிருக்கிறேன்.

பெயர் ____________________

முகவரி ____________________

____________________

**J & P Coats (India) Private Ltd.**
Advertising Section, 81 Palton Road, Bombay 400 001



# ஆங்கர்

க்ரோஷே நூல்கள்



# கோட்ஸ்

*சிறந்த நூல்களைத் தயாரிப்பவர்கள்*




தன்னைக் கைது செய்ய வந்த போலீஸ்காரரைச் சுட்டுக் கொன்று விட்டான் என்பது தான் லண்டனில் வசித்த படோலா என்னும் அந்த ஜெர்மன்காரன்மீது உள்ள குற்றச்சாட்டு. ஆனால் போலீஸ் கையில் சிக்கியதிலிருந்து அதற்கு முந்தைய எல்லா விஷயங்களும் தனக்கு முழுக்க முழுக்க மறந்து விட்டது போல் படோலா நடந்துகொள்ள ஆரம்பித்து விட்டான். அவன் உண்மையிலேயே மறந்து விட்டானா, அல்லது மறந்து விட்டது போல நடிக்கிறானா என்று போலீஸாருக்குப் புரியவில்லை. அவன் நடிக்கிறான் என்றுதான் அவர்கள் நம்பினார்கள். ஆனால் அதை எப்படி நிரூபிப்பது?

''போலீஸ்காரரைச் சுட்டுக் கொன்றது உண்மைதானா?''

''எனக்கு ஒரு விஷயமும் ஞாபகம் இல்லையே! நான் எப்படிப் பதில் சொல்வது?''

இப்படியே படோலா திரும்பத் திரும்பப் பதில் சொல்லிக் கொண்டிருந்தான்.

படோலா போலீஸ் கையில் சிக்கியதே ஓர் ஆச்சரியம்.

தனக்குத் தெரியாத யாரோ ஓர் ஆள் அடிக்கடி தன்னைப் போனில் கூப்பிட்டு உடனே நூறு பவுன் தனக்குக் கொடுக்க வேண்டும் என்றும், இல்லாவிட்டால் கொன்று விடுவதாகப் பயமுறுத்துவதாகவும் ஒரு மாது புகார் செய்தாள். உடனே போலீஸார் அந்த நம்பருக்கு யார் யார் போன் பண்ணுகிறார்கள் என்று கண்காணிக்க ஆரம்பித்தார்கள்.




ஒரு நாள் மாலை நான்கு மணி இருக்கும். அந்த ஆள் அவளுக்குப் போன் பண்ணிக் கொண்டிருக்கிறான் என்றும் அவன் சௌத் கென்ஸிங்டனில் உள்ள ஒரு பொது ஜன போன் நிலையத்திலிருந்து போன் பண்ணிக் கொண்டிருக்கிறான் என்றும் தெரிந்தது. உடனேயே இரண்டு போலீஸார் அந்த போன் நிலையத்தை நோக்கி விரைந்தார்கள். நல்லவேளை! அந்த ஆள் இன்னும் பேசிக்கொண்டிருந்தான்.

உடனே அந்த இரண்டு போலீஸ்காரர்களில் ஒருவரான பார்டி போன் நிலையத்தின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார். உடனே அந்த ஆள் வெகு வேகமாக வெளியே ஓடினான். இரு போலீஸாரும் ஒரு டாக்ஸியில் ஏறி அவனைப் பின்தொடர்ந்தார்கள். அந்த ஆள் ஒரு கட்டடத்துக்குள் புகுந்து கொண்டான். உடனே அந்த இரு போலீஸாரும் கட்டடத்துக்குள் நுழைந்தார்கள். அவன் கடைசி மாடியில் நின்று கொண்டிருந்தான். அதற்கு மேலே போக அவனுக்கு ஓர் இடமுமில்லை.

''இனி நீ எங்கும் போக முடியாது. ஆகவே சரண் அடைந்துவிடு'' என்றார் போலீஸ்காரர் பார்டி.

அவ்வளவுதான்; அந்த ஆள் பார்டியைக் கையில் இருந்த துப்பாக்கியினால் சுட்டுக் கொன்று விட்டுத் தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டான்.

அந்தப் பெரிய லண்டன் மாநகரில் அவனை எப்படிக் கண்டுபிடிப்பது? அவனைப் பற்றி பார்டியிடம் கூடச் சென்ற இன்னொருபோலீஸ்காரருக்குத் தெரிந்திருந்ததெல்லாம் அவன் உயரம் ஐந்து அடி பத்து அங்குலம், வயது முப்பது, தலைமயிர் பழுப்பு நிறம், கறுப்புக் கண்ணாடியும் சாம்பல் நிற ஜிஜாரும் அணிந்திருந்தான், அவனுடைய ஆங்கில உச்சரிப்பு அமெரிக்கனைப் போல இருந்தது என்ற விஷயங்கள்தாம். இருப்பதியில் மொட்டைத் தலையனைக் கண்டுபிடிப்பது போலல்லவா உள்ளது?

இருந்தும் போலீஸார் தளரவில்லை. வெகு தீவிரமாக விசாரணை செய்தனர். நாற்பத்தெட்டு மணி நேரத்துக்கு ஒரு தகவலும் கிடைக்கவில்லை.

கடைசியில் கொல்லப்பட்ட போலீஸ்காரர் பார்டியைப் பரிசோதனை செய்ததில் அவர் ஜேபியில் ஒரு சிறு குறிப்புப் புத்தகம் கிடைத்தது. அதில் சில டெலிபோன் நம்பர்களும் விலாசங்களும் எழுதப்பட்டிருந்தன. அது பார்டியின் குறிப்புப் புத்தகம் என்று நினைத்துக்கொண்டு போலீஸார் அதைப் பார்டியின் மனைவியிடம் கொடுத்தனர்.

ஆனால் பார்டியின் மனைவி அது தன் கணவரின் நோட்டுப் புத்தகம் அல்லவென்று சொல்லி விட்டாள்.

அப்படியானால் அது யாருடையதாக இருக்கும்? அது பார்டிக்கு எப்படிக் கிடைத்தது?

அதில் உள்ள விலாசங்களையும் போன் நம்பர்களையும் போலீஸார் ஒவ்வொன்றாக விசாரித்தார்கள். அதில் சில, மக்கள் சீட்டாடக் கூடும் கிளப்புகள். அந்தக் கிளப்புகளில் சிலர் அந்தப் போலீஸ் அதிகாரி கொடுத்த விவரங்களைக் கொண்ட ஓர் ஆள் சமீப காலமாக அங்கு வருவது வழக்கம் என்று சொன்னார்கள்.

அப்படியானால் பார்டியைக் கொன்றுவிட்டு ஓடினானே, அவனுடைய நோட்டுப் புத்தகமாக இருக்குமோ! டெலிபோன் பண்ணும்

போது அவன் அதை டெலிபோன் நிலேயத்தில் வைக்க, டெலிபோன் நிலேயத்தில் நுழைந்ததும் பர்டி அதைத் தம் ஜேபியில் போட்டுக் கொண்டிருப்பாரோ?

குறிப்புப் புத்தகத்தில் ரேகை அடையாளங்கள் இருந்தன. ஆனால் அவை பர்டியினுடையவை அல்ல. அந்த ரேகை அடையாளங்கள் இதுவரையில் போலீஸாரிடம் சிக்கியது கிடையாது.

அந்த ஆளேப் பார்த்திருந்த சிலர் அவன் ஒரு ஜெர்மானியன் என்று கூறினார்கள். இன்னும் சிலர் அவன் ஓர் கனேடியன் என்று கூறினார்கள். இதை வைத்துக் கொண்டு போலீஸார் அவன் கனடாவில் வசித்துக்கொண்டிருந்த ஒரு ஜெர்மானியனாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்துப் பத்திரிகைகளில் விவரங்கள் கொடுத்தார்கள்.

சில நாட்களுக்கெல்லாம் கனடா போலீஸார் படோலா என்னும் ஒரு ஜெர்மானியன் கனடாவில் சில வருடங்கள் வசித்தான் என்றும், ஆனால் அவன் அக்கிரமக்காரனானதால் அவனே நாட்டை விட்டு வெளியேற்றி விட்டோம் என்றும் தகவல் கொடுத்தார்கள். இதே சமயம் ஒரு லண்டன் ஹோட்டல் காரரிடமிருந்து ஒரு தகவல் வந்தது. யாரோ ஓர் ஆள் தங்கள் ஹோட்டலில் வாடகைக்கு அறை எடுத்துக் கொண்டு இருப்பதாகவும், ஆனால் போலீஸ்காரர் கொலேயுண்ட தினத்திலிருந்து அறையை விட்டு வெளியே போகாமலேயே இருப்பதாகவும் சொன்னார்.

உடனே போலீஸார் அந்த ஹோட்டலே நோக்கிப் போனார்கள். அந்த அறை உள் பக்கம் பூட்டி இருந்தது. போலீஸார் கதவை எவ்வளவு தட்டியும் உள்ளே இருந்த ஆள் கதவைத் திறக்கவில்லே.

உடனே போலீஸார் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்தார்கள். கதவண்டை நின்று கொண்ட படோலா கதவு தலேயில் இடிக்கக் கீழே விழுந்தான். போலீஸார் அவனேப் பிடித்துக் கொண்டார்கள். ஆனல் படோலா, இமிரவோ, போலீஸாரை எதிர்க்கவோ செய்யாமல் பேசாமல் பைத்தியக்காரனேப் போல் நின்றுகொண்டிருந்தான். போலீஸார், ''உன் கைகளே நீட்டு'' என்று சொன்னதும் கைகளே நீட்டினான். விலங்குகளேப் போட்டதும், ஒன்றுமே தெரியாதவன் போல், ''எதற்காக என் கையில் விலங்கு மாட்டுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

''நீ பர்டி என்னும் போலீஸ்காரரைக் கொன்றுயே அதற்காக!''

''பர்டியா? எனக்கு ஒரு விஷயமும் ஞாபகமில்லேயே! எல்லாம் திடீரென்று மறந்து விட்டதே'' என்றான்.

தலேயில் அடிபட்ட அவனேப் போலீஸார் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அவன் மிக சாதுவாக இருந்தான். ஒரு தகராறும் செய்யவில்லே. யார் என்ன கேட்டாலும் ''எனக்குத் திடீரென்று எல்லா விஷயங்களும் மறந்து விட்டனவே! என்ன செய்வேன்!'' என்று பதில் சொன்னான்.

போலீஸார் பல வைத்தியர்களேக் கொண்டு அவனேப் பரிசோதிக்கச் சொன்னார்கள். அவர்களாலும் ஒன்றும் கண்டு பிடிக்க முடியவில்லே.

உடம்பு குணமானதும் அவன் மீது வழக்குத் தொடரப்பட அவன் சிறையில் வைக்கப் பட்டான்.

இவனுடைய ஞாபக மறதி நடிப்பா, நிஜமா? எப்படிக் கண்டுபிடிப்பது? திடீரென்று போலீஸ் அதிகாரிக்கு ஒரு யோசனே தோன்றியது. படோலாவின் மிக நெருங்கிய நண்பரான ரோனல்ட் என்பவரைப் போலீஸ் அதிகாரி போய்ப் பார்த்தார்.

''சிறையில் உங்கள் நண்பர் சிகரெட் இல்லாமல் மிகவும் தவிக்கிறரே, நீங்கள் சிகரெட்டுகள் அனுப்பி வைக்கக் கூடாதா?'' என்று கேட்டார்.



''அப்படியா? அவர் சிகரெட்டுகள் இல்லாமல் தவிக்கிறார் என்பது எனக்குத் தெரியவே தெரியாதே! இதோ உடனே அனுப்பி வைக்கிறேன்!'' என்றார்.

''உங்கள் நண்பரின் சம்மதமின்றி நீங்கள் அனுப்பி வைத்தால் சிறைச்சாலை அதிகாரிகள் அவரிடம் கொடுக்க மாட்டார்கள். ஆகவே அனுப்பலாமா என்று கேட்டு அவருக்கு ஒரு கடிதம் எழுதுங்கள். அவர் அனுப்பலாம் என்று சொன்னால் அனுப்புங்கள்'' என்றார்.

''இது எனக்கு முன்னமே தெரியாமல் போய் விட்டதே!'' என்று சொல்லி அந்த நண்பர் உடனே படோலாவுக்குக் கடிதம் எழுதினார்.

உடனே படோலா பதில் எழுதினார்.

''அன்புள்ள நண்பர் ரோனால்டுக்கு, தங்கள் அன்புக்கு மிக்க நன்றி. தாங்கள் நலமா? தங்களைப் பார்த்துப் பல வருஷங்கள் ஆகி விட்டன. சிகரெட் இல்லாமல் மிகவும் அவதிப்படுகிறேன். உடனே சிகரெட்டுகள் அனுப்பி வைக்கவும். — படோலா.''

அவ்வளவுதான்; இந்தக் கடிதத்தைப் போலீஸ் அதிகாரி கோர்ட்டில் தாக்கல் செய்தார். போலீஸ்காரர் கொலை செய்யப் பட்டதற்கு முந்தைய எல்லா விஷயங்களையும் ஒரேயடியாக மறந்து விட்டவருக்குப் பழைய நண்பர் ரோனால்டை மட்டும் எப்படி ஞாபகம் இருக்கும்?

ஆகவே படோலா ஞாபகமறதி என்று நடிக்கிறார் என்று தீர்மானிக்கப்பட்டு வழக்கு தொடர்ந்தது. கடைசியில் அவருக்குத் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்டது.





''ஆபீஸ் அட்டெண்டென்ஸில் கிருபாகரன் என்ற என் பெயரை கிருதாகாரன் என்று திருத்தியது யார் சார்?''

## மூளைச் சிகிச்சை

குடிப் பழக்கத்தை விட முடியாமல் தவிப்பவர்கள் எத்தனையோ பேர். இந்தப் பழக்கத்துக்கு ஒருவனை அடிமையாகச் செய்வது மூளையில் உள்ள ஒரு குறிப்பிட்ட பகுதிதான் என்பதை விஞ்ஞானிகள் இப்போது கண்டு பிடித்திருக்கிறார்கள். பெருங் குடிகாரனை அதிலிருந்து மீள முடியாது தவிப்பவர்களின் தலையில் ஆபத்தில்லாத சிறிய சஸ்திர சிகிச்சை செய்து மூளையின் இந்தப் பகுதியை மட்டும் டாக்டர்கள் செயலிழக்கச் செய்கிறார்கள். ஐம்பது கன மில்லி மீட்டர் அளவே உள்ள இந்தப் பகுதி செயலிழப்பதால் மூளையின் மற்ற இயக்கங்கள் சிறிதும் பாதிக்கப்படுவதில்லை.

ஜெர்மன் இன்டர்நேஷனல்

இத்தகைய சஸ்திர சிகிச்சை சென்னை அரசாங்க பொது மருத்துவமனையில் நரம்பு சம்பந்தப்பட்ட நியூராலஜி பகுதியிலும் செய்யப்படுகிறது.

# சமையலறைக் குழாயில் அடைப்பா ?



# எக்ஸ்பெல்

**எக்ஸ்பெல் அதை நொடியில் நீக்குகிறது.**

**அடைப்புமில்லை!**
**தொல்லையுமில்லை.**

எண்ணெய்ப் பசையும் ஆகார துகள்களும் சமையலறைக் குழாயை அடைத்து அளவிலா தொல்லையைத் தருகின்றன. கொதிக்கும் நீரில் எக்ஸ்பெல் கலந்து உபயோகித்தால் குழாய் முற்றிலும் துப்புரவாகிறது.









பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்
BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

அன்றைய குஜராத்தி மரபினைப் பின்பற்றி சேலை அணியும் பாணி இன்று மீண்டும் மங்கையரிடையே உலவத் தொடங்கி உள்ளது. அதுவும் அணிந்திடும் சேலை மபத்லாலின் 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலையாக இருக்குமே எனில், அழகு முழுமை பெற்று முறுவலிக்கிறது!

'மெஃப்ரின்' பாலியெஸ்டர் சேலைகள் பண்டைய கற்பனைகளுக்கு, நவீன ஒயிலோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் நெசவின் நேர்த்தியை கலந்திழைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கின்றன!



**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
**நேர்த்தியான துணிமணிகள்**

***மெஃப்ரின்***

**பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்**
**உடுப்புத் துணிகள்**

AIYARS-M. 384 TM



# கவரும் கலை கட்டாத விலை!

மிகப் பழைய நாணயங்கள், தபால் தலைகள், பழங்கால விக்கிரகங்கள் முதலியன பிரமிக்கத் தக்க விலைக்கு விற்கப்படுவதைப் பத்திரிகைச் செய்திகள் வாயிலாக அறிகிறோம்.

உலகெங்கும், அரும் பொருட்கள் சேகரிப்போர் இருக்கிறார்கள். புராதன சரித்திரப் பிரசித்தி பெற்ற நாணயங்கள், தபால் தலைகள், சிற்பங்கள், பிரபல தலைவர்கள் உபயோகித்த பொருள்கள் — இப்படியானவற்றை அதில் ஆர்வமுள்ளவர்கள் போட்டி போட்டுக் கொண்டு வாங்குகிறார்கள்!

காந்திஜி தம் கைப்பட எழுதிய கடிதம், சமீபத்தில் லண்டனில் ஏராளமான பொருள் கொடுத்து ஏலத்தில் வாங்கப்பட்டது. நெப்போலியன் ஜோஸபைனுக்கு எழுதிய காதல் கடிதமும் அதே நிறுவனத்தின் மூலம் ஏலம் போயிற்று! இந்தியாவின் கடைசி வைஸ்ராய் போட்டு வந்த உடைகளைக்கூட இவ்வாறு பொருள் கொடுத்து வாங்கினார் ஒருவர்.

இப்படி அரும் பொருளைச் சேகரிக்கும் நபர் ஒருவர் நம்முடைய சிந்தாதரிப்பேட்டையிலும் இருக்கிறார்! பள்ளி மாணவனாயிருக்கும்போதே ஏ. சுப்பிரமணியத்துக்குச் சாரண வகுப்பு ஆசிரியர், தபால் தலைகளைச் சேகரிக்கக் கற்றுத் தந்தார். அந்த ஆசிரியரே, பழைய நாணயங்களையும் சேகரித்து வரும்படி தெரிவித்தார்.

சுப்பிரமணியத்துக்கு உதவியது ஒரு பெரிய பாத்திரக் கடை. அக்கடை அவனுடைய மாமா கடை. தங்கசாலைத் தெருவிலுள்ள எம். சிங்காரவேல் செட்டியார் கடை. வெகு காலமாக இருந்து வரும் நிறுவனம். பித்தளை, செம்பு வியாபாரம். ஏராளமான பழைய பாத்திரங்களும் இதர சாமான்களும் எடைக்கு வரும். பழசுக்குப் புதிசு வாங்குவார்கள் பலர்; அவசரத் தேவைக்குப் பணம் வேண்டுமென்று விற்பார்கள் பலர்.

சிறிய செப்பு, வெண்கல உருவச் சிலைகள், பழங்காலச் செப்பு நாணயங்கள் முதலியவற்றின் அருமை தெரியாமலோ அல்லது தெரிந்தும் பணத் தட்டுப்பாடு காரணமாகவோ அவைகளை எடைக்குப் போட வருவார்கள். அவைகளை வாங்கிச் சேகரிக்க ஆரம்பித்தான் சுப்பிரமணியம்.

ஒருநாள், இரண்டு அங்குலம் உயரமே உள்ள, அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய ஒரு சிலை கடைக்காரரிடம் மூன்று ரூபாய்க்கு விற்கப்பட்டது. அதற்கு ஆசைப்பட்டு, எட்டு ரூபாய்க்கு சுப்பிரமணியம் வாங்கினான்



பின்னர் அதையே நூறு ரூபாய்க்கு ஒருவர் விலைக்குக் கேட்கவே, இளைஞன் சுப்பிரமணியம் விழிப்படைந்தான்!

இப்படிப்பட்ட பழஞ் சின்னங்களை, சிறிய அளவுச் சிலைகளை விற்கக் கூடாது, சேகரிக்க வேண்டும் என முடிவு செய்தான்.

இன்று ஏ. சுப்பிரமணியம் தம்மிடம் உள்ள அரிய பொக்கிஷங்களை எடுப்பாகக் கண்ணாடி பீரோவில் கலையழகு ததும்ப வைத்துள்ளார்.

தந்தையின் ஆதரவும் இருந்ததால், பணச் செலவைப் பொருட்படுத்தாமல், அரும் பொருட்களை வாங்கி வைத்திருக்கிறார்.



ஏ. சுப்பிரமணியம்

''நான் அரும் பொருள் சேகரிப்பவன் என்பதை அறிந்து, என்னிடம் இப்போதெல்லாம் அதிக விலை கேட்கிறார்கள்! இயன்ற வரை வாங்கிச் சேகரிக்கிறேன்'' என்கிறார்.

இவர் 1946-ம் வருடத்திலிருந்து முதல் நாள் தபால் தலை, கவர் சேகரித்துக் கொண்டிருக்கிறார். நாணயங்களில் சோழர் காலத்திய செப்பு நாணயங்கள், வெள்ளி, தங்க நாணயங்கள், கிழக்கிந்தியா கம்பெனி காலத்திய நாணயங்கள் போன்றவை இருக்கின்றன. வராகன், அரை மொஹர் என்று அக்காலத்துத் தங்க நாணயங்களைப் பத்திரப்படுத்தியிருக்கிறார். —**ஏ. சுவாமிநாதன்**



''மத்தியான டிபன் இடைவேளையை 30 நிமிடத்திலிருந்து ஒரு மணியாக அதிகரித்திருக்கிறார்கள். நாலு இட்லி அதிகமாகவே வச்சுத் தா!''

□ □ □ □ □ □ □ □ □

## திருடனைக் கொட்டும் தேள்!

பாங்கிலிருந்து செல்லும் மோட்டார் வேனை வழி மறித்துக் கொள்ளையடிப்பது இந்தியாவில் கூட சகஜமாகி வருகிறது. இதிலிருந்து தப்ப மேற்கு ஜெர்மனியில் ஒரு வழி கண்டு பிடித்திருக்கிறார்கள். வேன் வழி மறிக்கப்படுகிறது என்பதைக் கண்ட மறுகணம் மோட்டார் ஓட்டி தமக்கு முன்னால் உள்ள ஒரு பித்தானை அழுத்துகிறார். அடுத்தகணம் வேனில் குவிக்கப்பட்டுள்ள கரன்ஸி நோட்டுக்கள் அனைத்தின் மீதும் ஒரு சிவப்பு நிறத் திரவம் மழையாகப் பொழிகிறது. அந்தச் சிவப்பு நிறத்தை நீக்கவே முடியாது. இவ்விதம் சிவப்பு நிறம் படிந்த நோட்டுக்களை யாரும் வாங்க மாட்டார்கள். ஜெர்மனியின் அரசாங்கப் பாங்கும் அவை இன்னாருக்குச் சொந்தம் என்பதாக நிரூபிக்கப்பட்டால் ஒழிய அதற்குப் பதில் வேறு நோட்டுக்களைத் தராது.

திருடனுக்குத் தேள் கொட்டிய கதைதான்!

-ஜெர்மன் இன்டர்நேஷனல்






## கார்களின் வேலை நிறுத்தம்!

மிக வேகமாகக் கார்கள் செல்வதற்கென்றே ஏற்பட்ட மேற்றோட்டுச் சாலைகளுள் ஜெர்மனிய 'ஆட்டோபான்', உலகப் பிரசித்தி. அங்கே இப்போதெல்லாம் ஞாயிற்றுக் கிழமைகளில் ஒரு காரைக் கூடக் காண முடியாது. எரிபொருள் பற்றாக்குறை, விலை உயர்வைச் சமாளிக்க, அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்த மேற்கு ஜெர்மனிய அரசு ஞாயிற்றுக் கிழமைகளில் காரை ஷெட்டை விட்டு எடுக்காதீர்கள் என்று மக்களைக் கேட்டுக் கொண்டது. விளைவு - வாரத்தில் ஒரு நாள் வீதிகள் வெறிச்சோடிக் கிடக்கின்றன. - ஜெர்மன் இன்டர்நேஷனல்



ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள் அல்லது . . .



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் 'தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்



ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய கனிவான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்- இந்த க்ரீமை வேண்டாத 'ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது... வாரக்கணக்கில் பட்டுப்போல் மென்மை-தொட்டுப் பார்த்தால் மழமழப்பு... பெண்மையின் கனிவைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!

## ஆன் பிரெஞ்ச்

ஹேர் ரிமூவர்




**அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்**

2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffrey Manners & Co. Ltd.

126 HR 202 Tam

# சிறந்த தரம்




## கிரைப் வாட்டர்

உங்கள் மென்மையான குழந்தைக்காகவே மிகுந்த அக்கறையுடன் தயாரிக்கப்பட்டது.




**mitl**

MIT Laboratories

Division of Indian Detonators Limited

Post Bag No. 397, Malleswaram, Bangalore-560 003.

FDS:MITL/5 TAM



# பொழுதுபோக்கு

பி.எஸ்.எம்.-சாமா

'நூறு ரூபாய் கடன் வாங்கிண்டு போனேளே அதை இன்னும் திருப்பிக் கொடுக்கலில்லையே!'

'அடக் கொஞ்சம் பொறு ஐயா! நான் அதை இன்னும் செலவு செய்த பாடே இல்லே.'



## சத்தியவாணி சந்தோஷமடைவார்!

''பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ வேண்டும்'' என்று ஆசிர்வதிப்பது குறைந்து போய், 'இரண்டே போதும்!' என்ற ஒரு நிலைக்கு வந்து கொண்டிருக்கிறோம். ஆனால் திருமதி சத்தியவாணிமுத்துவின் அபிப்பிராயத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்கக்கூடிய இந்தச் செய்தியைக் கேளுங்கள்:

ரஷ்யாவிலே வஸாய் டாஸிலெட் என்பவரின் மனைவியார் குழந்தைகளின் எண்ணிக்கையில் உலக ரிகார்டு கண்டிருக்கிறார்!.... 27 முறை கருவுற்று, 69 குழந்தைகளை அந்த மாது பெற்றுத் தந்தாள். அவற்றில் பதினாறு இரட்டைக் குழந்தைகள், ஏழு தடவைக்கு மூன்று குழந்தைகள், நான்கு முறை நாலு குழந்தைகள். பெருக்கிக் கூட்டிப் பாருங்கள். 69 வருகிறதா? இந்த அதிசய அன்னையின் புகழ் ரஷ்ய ஜார் மன்னர் இரண்டாம் அலெக்ஸாண்டர் வரை எட்டி, அவனுக்குப் பேட்டியளித்தாராம்!





## வால்கார்ட் விட்ச் - பொக்கே

ஒரு விஞ்ஞான விந்தைக் கருவிதான் இது!

நகர்ப்புறத்தில் நம்மைச் சுற்றியுள்ள காற்று சுத்தமானது அல்ல. அதில் சல்பர்டை ஆக்ஸைட், கார்பன் மானாக்ஸைட் போன்ற விஷ வாயுக்கள் கலந்திருக்கும். தொழிலகங்கள் மிகுந்துள்ள நகர்ப்புறங்களில் காற்றுக் கெட்டுப் போவது சகஜம். இதனை நீக்கத் திரு ராமச்சந்திரன் என்ற பம்பாய் இளைஞர் அமெரிக்க வால்கார்ட் ஸ்தாபனத்தாரின் கூட்டுறவோடு ஒரு விஞ்ஞான அதிசயக் கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார். ஓர் அறையில் இந்தக் கருவியை அரை மணி நேரம் இயங்க வைத்தால் அசுத்தக் காற்றை உள்ளுக்கிழுத்து நல்ல சுத்தக் காற்றாக மாற்றித் தருகிறது. அது மட்டுமல்ல; நீங்கள் விரும்பும் சுகந்த மணத்தோடு அறையில் காற்றைப் பரப்ப இந்த விஞ்ஞானக் கருவி உதவுகிறது. ரஸாயனப் பொருள்களின் கலவையைக் கொண்டு இந்த அற்புதத்தைச் சாதித்திருக்கிறார், இளைஞர் ராமச்சந்திரன். இந்தக் கருவியை ஈக்கள், கொசுக்களை விரட்டும் கருவியாகவும் பயன்படுத்தலாம். சுகாதார அதிகாரிகளே இந்த விஞ்ஞான சாதனத்தை வீடுகளிலும், ஆஸ்பத்திரிகளிலும், ஹோட்டல்களிலும் பயன்படுத்துமாறு சிபாரிசு செய்கிறார்கள். விலை ரூபாய் ஆயிரத்துக்குள் அடங்குமாம்!



### தும்மல் அரசி!

மியாமியில் பதினேழு வயதுள்ள மிஸ் ஜினார்க் 1966 ஜனவரி 4ந் தேதி தும்மல் போடத் தொடங்கினாள். 155 நாட்களுக்குப் பிறகுதான் நிறுத்தினாள். இவளது தும்மலின் வேகத்தைக் கணக்கிட்டார்கள். மணிக்கு 103.6 மைல் இருந்ததாம்!

## இதயங்கள்

இதயங்கள் என்பதாகப் பெயர் கொண்ட இந்த விளையாட்டு உங்கள் இதயங்களை மிக எளிதில் கவர்ந்து விடும் என்பதில் ஐயமேயில்லை.

சாக்பீஸின் அடிவாரத்தில் ''டைஸ்'' தயாரித்துக் கொள்ளத் தெரியுமல்லவா உங்களுக்கு? உருளைக் கிழங்கையும் பயன்படுத்தலாம். ஆனால் நாம் தயாரிக்கும் இந்த விசேஷ டைஸில் ஒன்று முதல் ஆறு புள்ளிகளுக்குப் பதில் H. E. A. R. T. S. என்ற ஆறு எழுத்துக்கள் ஆறு பக்கங்களில் எழுதப்பட்டிருக்கும். இப்படி ஆறு ''டைஸ்''கள் தயாரிக்க வேண்டும். ஆட்டக்காரர்கள் ஒருவர்பின் ஒருவராக ஆறு ''டைஸ்''களையும் குலுக்கிப் போடுவார்கள். H—5, H. E.—10, H. E. A.—15 H. E. A. R.—20 H. E. A. R. T.—25 H. E. A. R. T. S.—35 என்று எண்ணிக்கைகளைக் கணக்கிட வேண்டும். மூன்று H விழுந்தால் அந்த ஆட்டக்காரர் அது வரை தாம் சம்பாதித்த எண்ணிக்கைகள் அத்தனையையும் இழந்தவராவார்! எந்த ஆட்டக்காரர் முதலில் நூறு எண்ணிக்கை எடுக்கிறாரோ அவரே வெற்றி பெற்றவர்.

எண்ணிக்கை கணக்கிட உதாரணங்கள் :

H.H.A.R.T.S.—5 H.E.A.T.T.S.—15 E.A.R.T.T.S.—0 (அந்த ஆட்டத்துக்கு மட்டும்)

H.H.H.T.T.S.S.— அதுவரை எடுத்த எண்ணிக்கை எல்லாமே போச்சு !

''அடியே கோபி, மாலா, கிருஷ்ணு எல்லாரையும் அழைச்சுண்டு வா, இதை ஆடிப் பார்த்துடுவோம்!''












### கனத்த மூட்டை!

ஒரு மனிதன் ஒரு கனத்த மூட்டையைத் தூக்கிக் கொண்டு போவதைக் கவனித்தது ஒரு தேவதை.

''அதில் என்ன இருக்கிறது ?'' என்று கேட்டது தேவதை.

'' எனது கவலைகள் '' என்றான்.

''நான் அதைப் பார்க்கலாமா ?'' என்று வினவியது தேவதை.

சாக்கு மூட்டையைத் திறந்து பார்த்தால் ஒன்றுமில்லை. மனிதன் ஆச்சரியப் பட்டுப் போய், ''எனக்கு இரண்டு பெரிய கவலைகள் உள்ளன!'' என்றான். தேவதை கூறியது: ''நேற்றையக் கவலை, அது இப்பொழுது கடந்து போன விஷயமாகி விட்டது! இரண்டாவது நாளையக் கவலை. அது இன்னும் வரவேயில்லை! வரும்போது பார்த்துக் கொள்ளலாம். இதற்கு இந்தக் கனத்த சாக்குப் பை தேவையில்லையே !''

மனிதன் மகிழ்ச்சியோடு அந்தச் சாக்கை விட்டெறிந்து விட்டு 'விசில்' அடித்தபடியே நடந்தான்

**வாக்கிங் ஸ்டிக்கா? மட்டையா?**

சஸெக்ஸின் மூன்றாம் ஆட்டக்காரர் டபிள்யூ. பிராட் பிரிட்ஜ், தமது அதிர்ஷ்ட மட்டையை வாக்கிங் ஸ்டிக்காகப் பயன்படுத்தினார், தாம் கிரிக்கெட் நட்சத்திரப் பதவியிலிருந்து விடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில் !

புதிதாகக் கல்யாணம் செய்து கொண்டவள்: என்னிடம் ஒரு குறை இருக்கு. ஒரு காரணமும் இல்லாமலே குற்றம் குறை கண்டு பிடிப்பேன்!

கணவன் : அதுக்காக நீ கவலைப்படாதே! அடிக்கடி நல்ல காரணங்களை நான் உண்டாக்குகிறேன்.



**வா**ய்க்காலில் பளிங்கு மாதிரி தண்ணீர் ஓடுவதையும் அதில் தங்கள் பிம்பம் பிரதிபலிப்பதையும் பார்த்துக் கொண்டிருந்தனர் மருதனும் பொன்னியும். தூரத்தில் சூரியனின் உஷ்ண அலைகள் மிதந்தன.

''பொன்னி !.... இன்னும் ஆறு மாசம் தான்..... கிணறு வெட்டி முடிஞ்சதானு, தண்ணீர் தளதளன்னு வயக்காடெல்லாம் பாய்ஞ்சதும்.... அடாடா ! எவ்வளவு அழகாக இருக்கும்!.... நம்ம பட்டபாட்டுக்கெல்லாம் பலன் கிடைக்கப் போகுது ... ஆளுங்க சாப்பிடப் போயிருக்காங்க... வாயேன் கிணறு எப்படி இருக்குன்னு பார்ப்போம்!'' என்றான் மருதன்.

''மச்சான்! கந்தன் தவழத் தொடங்கிட்டான். வேப்ப மரத்து நிழல்லே பாருங்களேன்..... தவழ்றதைப் பாருங்க...கொள்ளை கொள்ளையாச் சிரிக்கிறான் மச்சான்....''

''எல்லாம் பேங்கிலே நாம் அக்கவுண்ட் ஆரம்பிச்ச வேளை இல்லியா?... மணி பன்னெண்டாச்சு.... வா... கிணத்தைப் பார்த்துட்டுச் சாப்பிடப் போவோம்!''

வேப்ப மரத்திலிருந்து இரண்டு குயில்கள் மௌனமாகக் கூவின.

அடுத்த ஐந்து நிமிஷங்களில் 'சடசட' என்று இறக்கைகளை அடித்துக் கொண்டு பயந்து பறந்து போயின. அங்கு எழுந்த பெருங் கூச்சலே காரணம். தூரத்தே வாழைகளுக்குத் தண்ணீர் சேந்திக் கொண்டிருந்தவர்கள், குப்பை சிதறிக் கொண்டிருந்தவர் யாவரும் அலறிக் கொண்டு ஓடி வந்தனர். கிணற்றின் உள் வாயிலிருந்த பாறையில் மண்டை உடைபட்டுக் குருதி ஓட மருதன் கிடந்தான்; பொன்னி கதறிக் கொண்டிருந்தாள். கந்தன் அழுது "மாய்ந்தான் — காரணம் தெரியாமல்.



''தூக்கி அடுத்த பஸ்ஸிலேயே திருச்சிக்கு எடுத்துக்கிட்டுப் போய்ப் பெரிய ஆஸ்பத்திரியிலே உடனே சேர்க்கணும்...''

யாதொரு வைத்திய வசதியும் இல்லாத கிராமத்து டாக்டரின் அவசர அறிவிப்பு.

''பஸ் செலவு, ஆஸ்பத்திரிச் செலவு — அட ஒரு அவசரத்துக்கு நிறைய ரூபாய் வேணுமேம்மா?'' என்றார் சுப்பையாப் பிள்ளை. ''உன் பெயரில் தானே பேங்க் கணக்கு வைச்சிருக்கான், மருதன்? ஒரு செக் எழுதி எடுத்துக் கிட்டு வரச் சொல்லி ஆறுமுகத்தை அனுப்பு!....'' என்றார் இடிந்து போய் நின்ற பொன்னியிடம். பொன்னி! முகமெல்லாம் ரத்தம் போல் வியர்த்து விட்டது. கை நடுங்கிற்று. செக் புஸ்தகத்தை எடுத்துக் கையெழுத்து மட்டும் போட்டுக் கொடுத்தாள். அந்த ஊருக்குப் புதிதாய்க் கிளை பரப்பியிருந்த பாங்குக்கு ஆறுமுகம் ஓடினான்.




பிரேமா ராமசாமி

ஒழிக

ஒழிக

ஒழிக

சாமா

''பஸ் வர நேரமாச்சு, சீக்கிரம் வந்துடுமேய்.....''

போன கால் மணியில் வந்து சேர்ந்தான் ஆறுமுகம். ''பேங்கிலே என்னவோ வேலை நிறுத்தமாம். பணம் எடுக்கக் கொள்ள முடியாதாம், கணக்குப்புள்ளேய்யா!''

''அப்போ.... புறப்படம்மா!... கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரிதானே? இலவசமாத்தான் இருக்கும். .. ஆனல்... ஆபத்து நேரம் கையிலே ரூபா இருந்தா நல்லா யிருக்கும்.''

பஸ் வந்தால் டிரைவரிடம் விவரத்தைச் சொல்லி உடனே கொண்டு போகத் தோதாய் வாசலில் நின்று கொண்டார். பஸ் வரவில்லை. லேட்!

மயங்கிய நிலையில் கட்டை போல் கிடந்த மருதனின் தலைப் பகுதியைப் பிடித்துச் சுப்பையாப்பிள்ளை தூக்கும் போது வைர நெஞ்சம் இளகி ஒடும்படி பொன்னி கதறினள். ''ஐயய்யோ! ஏஞ்சாமி!.... என் ராசா! பொழைச்சச் சொகமா வரணும், முருகா..!'' என அவள் வானத்தைப் பார்த்து ஓலமிட்டாள்.

இரட்டை மாட்டு வண்டி அவசரம் அவசரமாய்த் தாவி ஓடி மூன்றாவது மைலில் இருக்கும் சிறிய ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றது. மூணரை மணி மெயில் அரையே அரை நிமிஷம் அந்த ஸ்டேஷனுக்காக ஒதுங்கிக் கொடுக்கும். 'ஜல் ஜல்' என்று வண்டி சென்று நின்றபோது ஸ்டேஷன் வெறிச்சென்றிருந்தது. பதறி ஓடிப் போய் விசாரித்த ஆறுமுகம், ''வண்டி அப்பவே போயிடுச்சாம்!'' என்றான்.

பொன்னியின் உடம்பில் உள்ள நரம்புகள் அணு அணுவாய்த் துடித்தன..... விணுகிக் கொண்டுள்ள ஒவ்வொரு விநாடியும் அந்த ஜீவனைக் கொத்திக் கொண்டிருக்கும் பயங்கர நாகம் என்று அவளுக்குத் தெரியும். கிராமத்து வைத்தியர் செய்த முதலுதவியின் பலத்தினல்தான் அவனுடைய பிராணன் ஒரு மயிரிழையில் மெலிவாகத் துடித்துக் கொண் டிருக்கிறது.

''திகைக்கிறதிலே பிரயோஜனமில்லே!... பிச்சாபுரத்திலே டாக்ஸி கிடைச்சாலும் கிடைக்கும்.... மெயின் ரோடு போய்ட்டோமானல் திருச்சி போற டாக்ஸிங்க இருக்கும். அல்லது காரோ லாரியோகூடக் கிடைக்கும்'' என்று வண்டியை விரட்டச் சொன்னர் சுப்பையா.

மெயின் ரோட்டில் அரை மணி சென்றபின் அதிர்ஷ்டவசமாக ஒரு செவர்லே வந்தது. ஆபத்தைப் புரிந்து கொண்ட கார் சொந்தக்காரர் உடனே அவசரமாகத் திருச்சிக்கு வண்டியை விட்டார்.

ஐந்தரை மணிக்குக் கவர்மெண்டு ஆஸ்பத்திரியில் — மெயின் கேட்டில் கார் நின்றது.

ஒரு பெரிய போர்டு எழுதிப் போடப்பட்டிருந்தது.

தலையில் ஓங்கி அடித்துக் கொண்டாள் பொன்னி. ''கந்தா! உன்னை வீட்டிலே விட்டுட்டு வந்தேனடா...! உங்கிட்டே சொல்லிக்காமே அப்பா போசுப் போருரேடா...டாக்டருங்க வரமாட்டாங்களாம்... ஐய்யய்யோ ஸ்டிரைக் பண்ருங்களாமே.... கந்தா.... அப்பா இல்லாமே அம்மா வரமாட்டேண்டா.... இப்படியே போறேண்டா... இப்படியே போ....''

''சும்மா, வாயை மூடம்மா!'' என்று அதட்டினர் சுப்பையா. ''யாராவது பிரைவேட் டாக்டர் இருப்பார்.... பார்ப்போம் வா... ஆனல், உங்கிட்டே ரூபாய் இருந்தும் செலவழிக்க வழியில்லாமே போய் மாட்டிகிடுச்சேன்னுதான் திருக்கு திருக்குன்னு அடிச்சுக்கிடுது. டாக்டர் நூறு ரூபாய்க்கு மருந்து எழுதிக் கொடுப்பாரேம்மா... இவ்வளவு பெரிய ஊரிலே யாரிடம் வாங்கறது?''

''என் விதி ஐயா!.... இந்த உலகமே அஸ்தமிச்சப் போச்சது ஐயா!''

மருந்துக்கு நிறையச் செலவாகும் என ஒரு டாக்டர் சொன்னர். அவரும் ஆதரவு ஸ்டிரைக் செய்பவர்தான். என்ருலும் கொஞ்சம் மனசில் இரக்கம் இருந்தது.

''மருந்து வாங்கி வராமே வைத்தியம் பாருங்கன்னு என்னய்யா செய்யறது?.... என் பீஸைக்கூடப் பிறகு வாங்கிக்கறேன். அதுக்காக மருந்துக் கடைக்காரனுக்கும் நானே ரூபாய் கொடுக்க முடியுமா என்ன?''

மருந்துக் கடைக்காரர் சீட்டை மேலும் கீழுமாகப் பார்த்து விட்டு, ''எழுபத்தொன்பது ரூபாய்ப் பதினேஞ்சு பைசா'' என்று இயந்திரம் மாதிரி அறிவித்தார். டக்டக்கென்று சில பாட்டில்களை எடுத்து வைத்தார். ''ரூவா... போயி அனுப்பறேனுங்க....'' என்ற சுப்பையாவை மருந்துக் கடைக்காரர் நம்பவில்லை. மருந்து பாக்கெட்டுகள், கேப்ஸ்யூல்கள் உள்ளே போயின.

மறுபடியும் ஆஸ்பத்திரிக்கு ஓடினர்.

''இந்தத் தாலியை அவர்கிட்டே கொடுத்துட்டு மருந்தை வாங்கி வாங்கய்யா!'' என்று அலறினள் பொன்னி. கழற்றிய தாலி கையிலேயே நின்றது — மீண்டும் போட வேண்டிய அவசியம் இல்லாமல்.

கந்தனின் பிஞ்சு முகத்தைப் பார்த்துப் பார்த்து அலறினள் பொன்னி.



அப்பா இல்லே! அந்தத் தேக்குத் தூண் இல்லே. இல்லறத்தைத் தாங்கி நிற்கிற அந்தத் தூண் இல்லே. எவ்வளவு பலவீனமான நிலைமை! கிணறு வெட்ட வீட்டை அடமானமாக வைத்திருந்த கடன் வீட்டை விழுங்க நாள் பார்த்துக் கொண்டிருந்தது.

''உன் புருஷன் ஏதோ இன்ஷூரன்ஸ்போட்டானே... அவன் செத்துப் போனால் ரூபா கொடுப்பாங்கம்மா... அதை வாங்கி வீட்டை மீட்டுக்கலாம்மா....'' என்றார் கப்பையா.

உயிரற்ற ஜடத்தின் இயக்கத்திலிருந்த பொன்னி, ''அவரே போன பிறகு..... இந்த வீடா எனக்குப் பெரிசு!'' என்றாள். 'பரம்பரை பரம்பரையாய் வந்த வீடு. அதை யாரோ எடுத்துப் போவதா?' என்கிற பச்சாத்தாபத்தினால் கப்பையாப் பிள்ளை அது சம்பந்தமாக முயற்சி எடுத்துக் கொண்டார்.

அவர்கள் வெட்ட ஆரம்பித்திருந்த கிணறு மூடிப் போய், பாழுங் கிணறாகி, இருண்டு, ஓணான்கள் விளையாடும் குழியாகி விட்டது. அதன் அருகே ஒரு சிறிய குடிசையில் அவர்களுடைய மறு வாழ்வு தொடங்கியது. வெகு நாட்களுக்குப் பிறகு வந்த இன்ஷூரன்ஸ் தொகையில் பிள்ளையை ஏதோ கொஞ்சம் படிக்க வைத்தாள் பொன்னி.

அவன் வளர்ந்து வந்த சமயம் கிராமம் மிகவும் முன்னேறி, ஒரு முரட்டுச் சர்க்கரை ஆலை ஊருக்குள் வந்துவிட்டது. அங்கேதான் கந்தன் வேலைக்குச் சேர்ந்தான்.

''நாங்க எல்லாரும் இன்னிக்கு ஸ்டிரைக் செய்யறோம்மா....'' என்றான் கந்தன்.

'ஸ்டிரைக்' என்ற அந்த வார்த்தையைக் கேட்டதுமே அதிர்ந்து நடுநடுங்கி எழுந்தாள் பொன்னி. ''எதுக்குப்பா ஸ்டிரைக்? கந்தா... தம்பி! உன் அப்பாவை விழுங்கியதே இந்த ஒரே ஒரு வார்த்தை தாம்ப்பா! அந்த ஒவ்வொரு நிமிஷத்தையும் இப்போ நினைச்சாக்கூடக் குலை நடுங்குதடா!...... வேணும்டா....! எவனும் ஸ்டிரைக் செய்யட்டும். உனக்கு வேணும்டா. என்னை மாதிரி ஒரு தாலி அறுந்தவள் எங்கேயோ இருந்து உன்னைச் சபிச்சுட்டா, உனக்கு என்னென்ன ஆகுமோ?....''

''எல்லோருமே ஸ்டிரைக் பண்றாங்க..... என்னை மட்டும் வேணாங்கிறீங்க.. சரி. அப்போ போய்ட்டு வரேனம்மா!''

மகன் கையில் சாப்பாட்டுப் பாத்திரத்துடன் அசைந்து செல்வதைப் பாசத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். தன் வார்த்தைக்கு அவன் எவ்வளவு கௌரவமாய்க் கட்டுப்படுகிறான்!

மத்தியானம் மூன்று மணிப் பொழுதில், பரபரப்பாய்ச் சிலர் அவனுடைய மகனைத் தூக்கிக் கொணர்ந்து போட்டனர். ''அட, என்னம்மா, புள்ளை இது!.... எல்லாருந்தான் ஸ்டிரைக் பண்றாங்களே, இவன் எதுக்காக வேலைக்குப் போறான்? முதலாளிகிட்டே கைக்கூலி வாங்கற துரோகின்னு சொல்லி எல்லாரும் கலாட்டாப் பண்ணிக் கல் எடுத்து அடிச்சிட்டாங்க அம்மா! உடனே டாக்டர்கிட்டே கொண்டு போகணும்! திருச்சியிலே பெரிய ஆஸ்பத்திரியிலே சேர்க்கணுமுன்னுட்டாரு.....''

சிலை மாதிரி, பாறை மாதிரி, தூண் மாதிரி நின்றாள் பொன்னி.

ஒரு யுகத்துக்கு நின்றாள்.



### பட்டது போதும்!

''போன வாரம் என் மனைவியின் கண்ணில் ஒரு தூசி பட்டுவிட்டது. அதற்கு டாக்டர் செலவு ஐம்பது ரூபாய் ஆகிவிட்டது!''

''தேவலே ஐயா! என் மனைவியின் கண்ணில் ஒரு நெக்லெஸ் பட்டுவிட்டது. ஐந்நூறு ரூபாய் செலவாகிவிட்டது!''

- சாமா

# உடனடியாக இதமளிக்கும் பவுடர்:

## கோடையிலே குளிர்ச்சி தருகிறது











ஜான்ஸன்ஸ்*

# மென்தாலேடெட் பவுடர்

கோடைகாலம் வந்துவிட்டது. அதன் கொடுமையையோ, விவரிக்க வேண்டியதே இல்லை. வியர்வை, தாங்க முடியாத உஷ்ணம், தொல்லை மற்றும் கடுப்பு. கோடையின் கொடுமையை விரைவில் முறியடிக்க இதோ ஒரு புதிய வழி: ஜான்ஸன்ஸ் மென்தாலேடெட் பவுடர்—உடனடியாக இதமளிக்கும் பவுடர். அதை அங்கம் முழுதும் தூவிக்கொள்ளுங்கள். வியர்வையை உறிஞ்சியவாறே உடனடியாக மென்தாலின் குளுமையை அளித்து வியர்க்குரு மற்றும் கோடையில் ஏற்படும் சரும உபாதைகளிலிருந்து இதமளிக்கும் புதிய பவுடர். தவறாது அதை உபயோகித்து நாள்தோறும் சுகம் பெறுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தாலேடெட் பவுடர் இன்றே வாங்குங்கள். அது இன்றி இருப்பதுதான் எவ்வளவு கஷ்டமானது!

**உடனடியாக சுகமளிக்கும் பவுடர் உபயோகித்துக் கோடையின் கொடுமையிலிருந்து இதம் பெறுங்கள்**



**ஜான்ஸன் & ஜான்ஸன்**

# வீட்டுக் கணக்கும் நாட்டுக் கணக்கும்! -சீதா-

"பெண்களுக்குக் கல்வி அதிகமாக ஆக, அவர்கள் படிப்புக்கு ஏற்ற வரன் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைத்தாலும் வரதட்சிணை சீர்செனத்தி என்று ஏராளமாகச் செலவழிகிறது. அந்தச் செலவுக்கு ஈடுபட்ட முடியாமல் பெற்றோர்கள் பெண்களுக்குக் கல்யாணம் செய்யாமலே விட்டுவிடுகிறார்கள். ஆகவே பெண்களுக்குக் கல்விதான் யமனாக வந்திருக்கிறது என்கிறாள் எங்கள் மிஸ்!"

இப்படிச் சாரு சொன்னதும், "வேலை செய்யும் முப்பத்தைந்து வயதான பெண்ணை நாற்பத்திரண்டு வயதுக்காரார் கல்யாணம் செய்து கொண்டார். எல்லாரும் அந்தப் பெண்ணுக்கு விடிவு காலம் வந்ததே என்று சந்தோஷப்பட்டார்கள்! ஆனால் அந்தச் சந்தோஷம் நீடிக்கவில்லை. கல்யாணமான பதினைந்தாம் நாள் அந்தப் பெண் பிறந்த வீட்டுக்குத் திரும்பிவிட்டாள்" என்றார் சங்கரன்.

"ஏன்? ஏன்? ஏன்?" என்று சிலரும், "புருஷன் செத்துப் போய்விட்டானா?" என்று சிலரும் ஏககாலத்தில் கேட்டனர்.

"புருஷன் சௌக்கியமாய்த்தான் இருக்கிறான். விஷயம் வேறு. நாற்பத்திரண்டு வயதான கணவன், அவள் வேலை செய்து சம்பாதிக்கும் பணத்தை உத்தேசித்துத்தான் கல்யாணம் செய்து கொண்டானாம். அதோடு முதல் மனைவியிடம் தான் பெற்ற குழந்தைகளுக்கு வீட்டில் பாடம் சொல்லிக் கொடுக்கவும் சொன்னானாம். மற்றபடி அவளை மனைவியாக ஏற்கும் உத்தேசமில்லை....என்று சொல்லி விட்டானாம்!"

"கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்திருக்கலாமே!"

"ஊரிலே இருக்கிறவர்கள் அவள் கல்யாண மாகாமல் நிற்கிறாளே என்று பேசிக் கொண்டதால் இரக்கப்பட்டு கல்யாணம் செய்து கொண்டானாம்!"

"அயோக்கிய ராஸ்கல்!" என்று சீறினான் சுந்தர்.

"இந்த மாதிரி தகிடுதத்தமெல்லாம் இன்னும் ரொம்ப நாளைக்கு நீடிக்காது. இப்பொழுது பெண்கள் தங்கள் உரிமைகளை வலியுறுத்தும் காலம் வந்து விட்டது. ஜூன் 8, 9 தேதிகளில் பிரான்ஸ் முழுதுமுள்ள பெண்கள் ஸ்டிரைக் செய்யப் போகிறார்களாம்!" என்றாள் சாரு.

"இதென்ன கூத்து? எப்படி ஸ்டிரைக் பண்ணுவா? புரியவில்லையே!" என்றாள் அத்தை அன்னபூர்ணம்மாள்.

"ஆபீசுக்குப் போய் வேலை செய்யற பெண்கள் அன்றைக்கு வேலைக்குப் போக மாட்டார்கள். வீட்டிலேயிருந்து புருஷனுக்குச் சமைத்துப் போட்டு, குழந்தைகளைக் குளிப்பாட்டி விடற காரியங்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள். மொத்தத்தில் இருபத்து நாலு மணி நேரத்துக்கு எந்த வேலையும் செய்ய மாட்டார்கள்!" என்று விளக்கினாள் ஹேமா.

"இதென்னடி, விநோதமாக இருக்கிறது!" என்றாள் அகிலாண்டம்மாள்.

"பிரான்சில் இதைவிடவும் விநோதங்கள் நடக்கின்றனவே!" என்றாள் ஹேமா. "பிரஞ்சு நாட்டு நிதிமந்திரியாக நிக்கோல் பிரியட் என்ற அம்மையார் நியமிக்கப்பட்டிருக்கிறார். அவர், 'என் வீட்டுக் கணக்கையே சரிவர நிர்வகிக்க முடியவில்லை. எப்படி நாட்டுக் கணக்கை நிர்வகிக்கப் போகிறேனோ தெரியவில்லை' என்று எடுத்த எடுப்பிலேயே அப்பட்டமாய்ச் சொல்லியிருக்கிறார்."

"வீட்டுக் கணக்கைச் சரியாய் நிர்வகிக்கத் தெரியாதவள் நாட்டுக் கணக்கைச் சரியாக நிர்வகித்து விடலாம். ஐன்ஸ்டினை மாதாந்திர பால் கணக்கைப் போடச் சொல்லு, தப்பாகப் போடுவார்" என்றார் சங்கரன்.

"பிரதமர் குதிரை சவாரி பண்ணப் போய்க் கீழே விழுந்து கை விரலிலே எலும்பு முறித்துக்கொண்டிருக்கிறார்!" என்றாள் சாரு.

"இந்திரா! எதற்குக் குதிரைச் சவாரி பண்ணப் போறா! சும்மா இருக்கப்படாதோ?" என்றாள் அகிலாண்டம்மாள்.

"சும்மா இருந்திருந்தா நீ இப்படிப் பேசுவியா? அதற்காகத்தான் குதிரை சவாரி பண்ணினாள்!" என்றாள் சாரு.

"தாகூர் 'சித்திரா' என்று ஓர் அருமையான நாடகம் எழுதியிருக்கிறார். அதிலே வர சித்ரா பெண்ணாகப் பிறந்திருந்தாலும் அவள் அப்பா அவளை ஆணாகவே வளர்த்து, வில்வித்தை, வாட்போர் எல்லாம் பயிற்றுவிக்கிறார்!" என்றாள் ஹேமா.

"நேருஜியும் இந்திராகாந்தியை ஆணுக்கு ஆணாகவும் பெண்ணுக்குப் பெண்ணாகவும் தான் வளர்த்திருக்கிறார். இல்லேன்னா இவ்வளவு பெரிய ராஜ்யத்தைக் கட்டியாள முடியுமா? எவ்வளவு வெற்றிகரமாக ரயில்வே ஸ்டிரைக்கைச் சமாளிச்சுட்டா பாரேன்!" என்றாள் சாரு.



# ஏக்கங்கள்

"கீதா! கீதா!...." அவசரமாக அழைத்தவாறே அறைக்குள் நுழைந்தான் அவன்.

அப்படியே ஆச்சரியத்தில் சிலிர்த்தான்.

கீதா ஒரு தேவதையின் ஒயிலோடு அங்கே நின்றாள். ரோஜா வண்ணச் சேலையில், தங்க மினுமினுப்போடு நட்சத்திரங்கள் சுடர்விட்டன. நெற்றியில் மினுக்கிட்ட தங்க நிறப் பொட்டில் அவள் முகமே தகதகத்தது. அவன் கைகள் அவளைப் பற்றி இழுத்தன.

"நீ இன்னும் கிளம்பவில்லையா என்று கூப்பிட்டுக் கொண்டே வருகிறேன். நீ இங்கே ஒளிந்து கொண்டு..."

"பின்னே என்ன? நீங்கள் வருவதாகச் சொன்ன நேரம் கழித்து ஒரு மணியாகிறது. நான் என்ன, வாசலில் பதுமையாக நின்று கொண்டே இருப்பதா?"

"அது எப்படி? நீ வாசலில் பதுமையாக வந்து நின்று விட்டால், வானில் நிலவு உதிக்க மறந்து ஓடி ஒளிந்து விடுமே...."

"போதும்! இந்தப் புகழ்ச்சிக்குக் குறைச்சல் இல்லை."

"ஏன்? என் மகாராணிக்கு நான் என்ன குறை வைத்திருக்கிறேனாம்?" அவன் கைகள் அவளை இறுக்குகின்றன.

"சொல்லிவிடட்டுமா?" என்று சிணுங்கினாள் அவள்.

"சொல்லேன். நான் தீர்த்து வைக்கிறேன்."

"குறைகளே காண முடியாத உங்கள் அன்பில், இனிமேல் கொஞ்சம் குறை தென்படும்படி நடந்து கொள்ளுங்களேன்."

"போக்கிரி! இந்தக் குறைதானா உனக்கு? பயந்தே போனேன்."

இருவரும் கலகலவென்று சிரித்தனர்.

மனமெல்லாம் நிறைந்து தளும்பும் குதூகலத்தோடு இருவரும் நண்பன் வீட்டுக்கு நடந்தனர்.

கையில் பட்டாக வழுக்கும் குழந்தையை ஏந்தி நின்ற நண்பனின் மனைவி கீதாவைப் பார்த்ததும், "விசேஷம் உண்டா? கட்டுப் பாடா....?" என்று தாய்மையின் பெருமையோடும், அனுபவமுதிர்ச்சியோடும் வினவினாள்.

கீதா மூர்த்தியைப் பார்த்தாள்.

அவனும் அவளைப் பார்த்துவிட்டு வேறு பக்கம் பார்வையைப் பெயர்த்துக் கொண்டான். சற்று முன் கட்டு மீறி நின்ற குதூகல உணர்வு சட்டென்று வடிந்துவிட்ட துடிப்போடு மனம் கலங்கினாள் கீதா.

குறைகளே இல்லை என்று குறை வேண்டி நின்றாளே அவள். இத்தனை பெரிய குறையைத் தன்னகத்தே கொண்டுவிட்டு!

"ஸாரி! ஸாரி! நான் உங்களை வருத்தப் படுத்திவிட்டேனா?" என்று வருந்தினாள் நண்பனின் மனைவி.

இருவருமாக வீட்டுக்குத் திரும்பியபோது ஒரு கனத்த மௌனம் படர்ந்து விட்டது.

காலையில் மௌனக் கூடு சற்று உடைபட்டாலும், பழைய சலகலப்பும் குதூகலமும் அங்கு கிளைக்கவில்லை. அன்று மாலையும் அவன் தாமதமாக வந்தான். அவள் காரணம் கேட்கத் துடித்தாலும் தன்னை அடக்கிக் கொண்டாள்.

அந்த நூலிழை நைய்வு, பழைய சௌஜன்யத்தை விரட்டி விட்டாலும் கீதா அதைப் பாராட்டாமல் அவனுடன் சகஜமாக இழைய முயன்றாள். அந்தந்தச் சமயங்களில் சற்றுச் சிரித்துப் பேசினாலும், பல தடவைகளில் அவளைக் கண்டு கொள்ளாத மௌனத்தில் அடங்கி விடுவான் அவன்.

வாங்கும் பணத்தை அவளிடம் அப்படியே தரும் அவன், கொஞ்ச நாட்களாக ஒரு குறிப்பிட்ட தொகையைக் குறைத்துத் தந்து கொண்டிருந்தான். அவனாகச் சொல்லட்டும் என்று கீதா உரிமை எடுத்து அதைக் கேட்டுக் கொள்ளவில்லை.

அன்று துணிகளைச் சலவைக்கு அனுப்ப எடுத்த போது அவன் பையில் ஒரு மணியார்டர் கூப்பன் இருப்பதைப் பார்த்தாள். ரூபாய் ஐம்பதைப் பெற்றுக் கொண்டதான ரசீதில் வெங்கடேசன் என்ற கோணல்மாணலான கையெழுத்து இருந்தது. அது அவனுடைய அப்பா!



இதை அவன் அவளிடம் சொல்லியிருக்கலாம். அவள் தடுக்கப் போவதில்லை. ஆனாலும் அவனுக்குச் சொல்ல விருப்பமில்லை. இதை எண்ணிப் பார்த்தபோது அவள் மனத்தில் ஒரு வேதனை குழி பறித்தது. தன் கணவன் ஏதோ ஒரு திசையில் தன்னை விட்டு மாறிச் செல்கிறான் என்பதை அவளால் உணர முடிந்தது.

அன்று ஞாயிற்றுக்கிழமை.

இருவருமாக வெளியே உல்லாசமாகச் சுற்றிவிட்டு வரும் அந்த நாள் இப்போதெல்லாம் சாதாரண நாளாகி விட்டது.

மூர்த்தி மட்டும் வெளியே போயிருந்தான்.



குளித்துவிட்டு அம்பிகையின் படத்துக்கு ரோஜா மலரைக் கிள்ளி வைத்தாள் சீதா. கண் மூடித் தியானிக்கும்போது வாசலில் நடையொலி கேட்டது.

கதவைத் திறக்க ஓடினாள். பிரமித்தாள்.

வாசலில் நின்றவர் வெங்கடேசன்!

''வாருங்கள், மாமா! 'உட்காருங்கள்!'' மரியாதை குறையாத பணிவோடு கூறினாள்.

''எங்கே அவன்?'' என்று உட்காராமலேயே அவர் கேட்டார்.

''எங்கேயோ வெளியில் போயிருக்கிறார். வந்து விடுவார்...'' என்று அவள் கூறும் போதே மூர்த்தி வந்து விட்டான்.

''மூர்த்தி! எனக்கு அவசரமாக இருநூறு ரூபாய் பணம் வேண்டும்.''

முதல் நாள் கொண்டு வந்திருந்த அந்த மாதச் சம்பளம், அவன் கையில் முழுதாக இருந்தது. அதிலிருந்த பணத்தை எடுத்துத் தந்தையிடம் கொடுத்தான் அவன்.

சீதா அவசரமாகக் காப்பி போட்டுக் கொண்டு வந்தாள்.

வெங்கடேசன் காப்பியைச் சாப்பிட்டார். பிறகு அவனிடம் பெயருக்குக்கூடச் சொல்லிக் கொள்ளாமல், மகனிடம் மட்டும் விடைபெற்றுச் சென்றார்.

சீதா கண்களில் படர்ந்த பனிப்பை மறைத்தவாறே உள்ளே சென்றாள்.

மூர்த்தி ஈஸிசேரில் சாய்ந்த வண்ணம் பொய்த் தூக்கம் தூங்கிக் கொண்டிருந்தான். அவளிடம் பேசுவதைத் தவிர்க்கும் வண்ணம் அவன் அவ்வாறு இருப்பதை அவள் புரிந்து கொண்டாள். அவனது மோனத்தைக் கலைக்க விரும்பாத மோடியுடன் கதவோரம் உட்கார்ந்து கொண்டாள்.

அவர்களுக்குள் இந்த ஒதுக்கம் ஏன்?

பொங்கிப் பூரித்து இனிமை ததும்பி நின்ற அந்த வாழ்க்கையிலா இப்படி ஒரு வறண்ட மௌனம்? அவர்களின் அன்புக் கூட்டாக ஒரு மழலை மலரவில்லை என்ற துயரம் மட்டும்தானா அது?

வாசலில் வீட்டுக்காரர் வந்து நின்றார். அவர் 'பில் புக்'கை விரிக்கும் போதே மூர்த்தி சொன்னான்: ''ஸாரி ஸார்! இந்தத் தடவை கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள்..... அடுத்த மாதம் சேர்த்துத் தந்து விடுகிறேன்.''

''நீங்கள் தவணையே சொன்னதில்லையே!'' என்று வந்தவர் ஆச்சரியப் பட்டார்.

''அப்பா ஊரிலிருந்து வந்தார். அவசரத் தேவைன்னு கேட்டார்.''

''சரி சார்!''

திரும்பும்போது கதவருகே சீதா உட்கார்ந்திருப்பதை அவன் பார்த்தான்.

''சீதா! இப்படி வந்து உட்காரேன்!''

அவள் எழுந்து வந்து அவன் அருகே அமர்ந்தாள்.

''பால்காரனுக்கும், பேப்பர்க்காரனுக்கும் பணத்தைக் கொடுத்துவிடு. மளிகைக்கு அடுத்த மாதம் தரலாம்.''

''உம்!'' என்றாள் சீதா.

''அப்புறம்.... நம் மாரியேஜ் அனிவர்சரிக்காக உனக்கு ஒரு புடவை எடுக்கணும்னு சொல்லி வைச்சிருந்தோமே, அதை எடுக்க முடியாது சீதா!''

கோமகள்




''பரவாயில்லே. எனக்குப் புடவைகள் நிறையத்தான் இருக்கு.'' தனக்கிருந்த உரிமை உடைபட்டுவிட்டது போல் உணர்ந்தாள் அவள்.

அவன் தன் கைகளைத் தலைக்கு அண்டக் கொடுத்தவாறே மீண்டும் மௌனமானான். அவனுள் ஏதோ முடிவுக்கு வர முடியாத ஒரு குழப்பம் கவிந்திருப்பதை அவள் உணர்ந்தாள். அப்பா வீடு தேடி வந்தால் அவர்தான் தன்னிவிட முடியுமா என்ன?

''களைத்துப் போயிருக்கிறீர்களே, கொஞ்சம் காப்பி போட்டுத் தரட்டுமா ?'' என்றாள் சீதா பரிவாக.

''இருந்தால் கொடு சீதா !''

சீதாவிடமிருந்து காப்பியை வாங்கிக் கொண்ட மூர்த்தி, ''நீ பாதி எடுத்துக் கொள்!'' என்றான்.

''நான் இப்பத்தான் சாப்பிட்டேன், வேண்டாம்.''

காப்பி டம்ளரைக் கீழே வைத்துவிட்டுக் காலடியில் அமர்ந்திருந்த சீதாவின் தோளில் கைகளைப் போட்டவாறே அவள் முகத்தோடு முகம் நோக்காமல் தூரப் பார்த்தவாறே அவன் கூறினான்: ''சீதா ! அப்பா மாதா மாதம் என்னிடம் ஒரு குறிப்பிட்ட தொகையை எதிர்பார்க்கிறார்.''

அவள் அவனுக்கு இதமாகக் கூறினாள்: ''அது நியாயம்தானே? உங்களைப் பெற்றவர்களுக்கு உதவும் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறதென்றால், நீங்கள் செய்ய வேண்டியது தானே?''

''சீதா! நீயா சொல்றே? உனக்கு இதில் விருப்பம் இருக்காதுன்னுதான் நான் உன்கிட்டே சொல்லாமலேயே அவருக்கு அனுப்பிக்கிட்டிருக்கேன்.''

''எனக்கு அது தெரியும் !''

''உனக்குத் தெரியுமா? என்கிட்டே கேட்கவே இல்லையே?''

''நீங்களே மறைக்கும்போது நான் கேட்க முடியுமா? எனக்கு எல்லாம் நீங்கதான்னு இருக்கேன். நான் நம்பியிருக்கிற தெய்வமே என்னிடம் மறைச்சிருந்தால் அதுவும் நல்லதுக்குதான்னு என்னைச் சமாதானம் பண்ணிக்கிட்டேன்......''

''சீதா! சீதா! ஏன் அழறே ?''

''ஒன்று மட்டும் ஞாபகம் வைச்சுக்குங்க. உங்கப்பா அம்மாவுக்கு நீங்கள் எதைச் செய்தாலும் நான் தடுக்கமாட்டேன். அவர்களுக்கு என்னைப் பிடிக்கலேன்னாலும் நான் மனசார மரியாதையாக நடந்துக்கறேன். ஆனால் உங்கள் மனசிலேயிருந்து மட்டும் என்னை இறக்கிடாதீங்க. நமக்குள்ளே இனி மேலாவது எந்த ஒளிவு மறைவும் இல்லாமல் இருக்கலாம்.''

''என் மேலே தப்புத்தான் சீதா. ஆனால் உன்கிட்டே எப்படியும் சொல்லிடணும்னு தான் இருந்தேன்.''

''.....''

''சீதா! அப்பா இன்னொண்ணுகூடச் சொன்னார்.....'' தயங்கினான் அவன்.

''சொல்லுங்களேன்.''

''உனக்கு மனசுக்குள் அந்தத் துயரம் இருக்கும்னு தெரியும். ஐந்து வருஷங்களாகப் போகிறது. நமக்குத் திருமணம் நடந்து...''

''உங்களுக்கும் அந்தக் குறை இருக்கும்னு தெரியும்.'' அழுத்தமாகக் கூறினாள் அவள்.

''என் தம்பிக்கு மூன்று குழந்தைகள். 'ஒன்றை எடுத்து நீ வளர்க்கலாம்டா'ங்கிறார்.''

சீதாவின் கண்களில் 'குபு'க்கென்று நீர் பீறிட்டது. அப்படியே அவன் மடியில் சாய்ந்து விசும்ப ஆரம்பித்தாள்.

''சீதா... சீதா....'' என்று அவள் கண்ணீரைத் துடைத்துச் சமாதானப்படுத்த முயன்றான் அவன். ''அது சரிப்பட்டு வராது என்று சொல்லிவிட்டேன் சீதா.''

''அதது நடக்க வேண்டிய சமயத்தில் நடக்காவிட்டால் உலகத்துக்கு ஏளனமாகி விடுகிறதே !''

அவளுடைய தேம்பலுக்கு இடையே ஆதங்கம் வெளிப்பட்டது.

''அதைப் பற்றி நமக்கென்ன கவலை ? ஆசைப்படுகிறோம். பிறத்தியார் கேட்கும் போது அவமானமாக இருக்கிறது. மற்றவர்கள் குழந்தையைப் பார்க்கும் போது பொறுமை ஏற்படுகிறது. ஆனாலும் என்ன செய்ய முடியும்? நமக்கென்று கிடைத்தால்தானே பிறர் பேச்சுக்கள் நம்மைத் தீண்டிப் புண்படுத்தாமல் இருக்கும்? நமக்கென்று இருந்தால்தானே அந்தச் சுவைகளை நாமும் அனுபவிக்கலாம். அதற்காக இடிந்து போக முடியுமா ?''

ஒருவருக்கொருவர் மனம் விட்டுப் பேசிய இந்த நிகழ்ச்சிக்குப்பின், அவர்களிடையே

பழைய கலகலப்பும், பேச்சும், மீண்டும் தொடர ஆரம்பித்தன.

''சீதா! இதோ பார்!''

''என்ன இது, புடவையா ?''

''நாளைக்கு நம் 'திருமண நாள்' இல்லையா?''

''பணம் கையில் இல்லாத போது ஏன்?''

''முதலில் அப்படிச் சொன்னேன் சீதா. ஆனால் வருடத்துக்கு ஒரு நாள் இது. ஐந்து வருடங்களாகக் கொண்டாடுறதை இப்போது மட்டும் விடுவானேன்? புடவை விலை குறைச்சல்தான். ஏதாவது வாங்க வேண்டும் என்று வாங்கினேன். பச்சைக் கலர், மஞ்சள் பூக்கள். நமது இனிமையான வாழ்வு அன்று போல் இன்றும் பசுமையாக மங்களகரமாக இருக்கிறது என்பதற்கு அடையாளம்...''

அவள் அன்பில் நனைந்து, தன்னை மறந்து நின்றாள். உடலெல்லாம் புல்லரிப்பது போல் இனிய ரேகைகள் பரவின.

''உங்கள் அன்புக்கு இந்தச் சாட்சி வேண்டுமா ? எனக்குத் தெரியாதா?'' என்று பரவசத் துடிப்போடு கேட்டாள்.

ஒரு கலக்கத்துக்குப்பின் உண்டாகும் தெளிவின் பரவசத்தில் அவள் மிதந்தபோதுதான், மூர்த்தியின் அப்பா அவன் இல்லாதபோது மீண்டும் வீட்டுக்கு வந்தார்.

சீதா அவரை மரியாதையோடு வரவேற்று உபசரித்தாள்.

மகன் இல்லாத நேரம் பார்த்து வரவேண்டும் என்று சந்தர்ப்பம் பார்த்தே வந்திருந்தார் அவர். கொஞ்சம்கூட யோசிக்காமல், லவலேசமும் ஈவிரக்கமின்றி அவர் நேரிடையாகவே அவளிடம் கேட்டார்:

''அவன் சம்பாதிக்கிற அத்தனை பணத்தையும் தாம்தூம் பண்ணிடறியாமே? கட்டு செட்டாய் இருந்து நாலு காசு சேர்த்து வைப்பதில்லையா?''

இந்தக் குற்றச்சாட்டைக் கேட்டு அச்சத்துடன் நடுங்கினாள் அவள்.

''கேட்கிறேனே....'' தூண்டினார் அவர்.

அவள் பயத்தோடு மென்று விழுங்கியவாறே கூறினாள். ''எல்லாம் அவர் இஷ்டப்படி செய்யறார். எனக்கு ஒன்றும் தெரியாது.''

''ஆகாகா! இதை நம்பச் சொல்றியா ? குடும்பத்தை நடத்தறவள் நீ. எப்போது பார்த்தாலும் உனக்குத் துணிமணிகள் வாங்குறதும், ஊர் சுற்றுவதும் சே! எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. நாங்கள் பெற்றவர்கள் இருக்கிறோம் என்று நாலு காசு அனுப்பச் சொன்னாயா ?''

சீதா அப்படியே கூனிக் குறுகி நின்றாள். வார்த்தைகள் எழவில்லை. மனத்துள் அழுகை பீறிட்டு வதைத்தது.

''அடுத்தாற்போல் சின்னவனுக்குக் கல்யாணம் ஆச்சு. இன்னிக்கு மூன்று குழந்தைகள். இங்கே ஒன்றையும் காணோம்.''

அவமானத்தால் முகம் சிவக்கக் கண்ணீர் மாலையாக வழிய அவள் தலை குனிந்தாள்.

''உங்கள் ரெண்டு பேருக்கும் என்ன பிரமாதமா செலவாகிவிடப் போகிறது ? மாதா மாதம் நான் எழுதிக் கேட்கிற பணத்தை அனுப்பி வைக்கணும், இனி மேல். புரியுதா?'' என்று கடுகடுப்புடன் கூறியவர் சட்டெனக் குரலைத் தாழ்த்திக் கொண்டு செயற்கையான போலித்தனத்தோடு கேட்டார். ''ஆமாம்! அஞ்சு வருடமாச்சே! பிள்ளை குட்டியைத்தான் பெற்றுத் தரலே. ஆண்டு அனுபவிச்சது போதாதா ? அவனை விட்டு விடேன். அவனுக்கு நான் நல்ல பெண்ணாப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைச்சடறேன். அவனும் குழந்தை குட்டியோட வாழ வேண்டாமா?''

சீதா வாய்விட்டு அலறி விழுந்தாள்.

மூர்த்தி வெளிப்புறமிருந்து உள்ளே ஓடி வந்தான். அவளைத் தூக்கித் தாங்கி முகத்தில் நீர் தெளித்தான்.

வெங்கடேசன் விதிர்த்தவாறே அவனைப் பார்த்தார். அவர் அவனைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

''பேஷ்! நல்லாயிருக்குப்பா! நல்ல வேளைக்கு நான் முதலிலேயே வந்துவிட்டேன். நீங்கள் பேசியது எல்லாத்தையும் கேட்டேன் அப்பா. நீங்கள் கேட்கும்போது எல்லாம் நான் பணம் அனுப்பியும் அவளை ஏன் கொடுமைப் படுத்த வந்தீங்க? என்னை நம்பி வந்தவள் அவள்! எங்கே போவாளாம்? அவளைக் காப்பாத்தற தார்மீகக் கடமை எனக்கு எப்போதும் உண்டு. அப்பா! தயவு செய்து நீங்கள் எங்கள் வாழ்க்கையிலே தலையிடாதீங்க. மாதா மாதம் நூறு ரூபாய் அனுப்பிச்சிடறேன். என்னால் உங்களுக்குச் செய்ய முடிந்த கடமை அது. அதே போல் என்னை நம்பி வந்தவளை வாழ்விக்கும் கடமையை நான் உதறிவிட மாட்டேன். அது மட்டுமல்ல; என் உயிர் இருக்கிறவரை இவள் ஒருத்திதான் என் மனைவி....!''

''ஏதோ உன் நல்லதுக்குச் சொன்னேன்; நான் வரேன்...''—விட்டால் போதும் என்று புறப்பட்டு விட்டார் அவர்.

சீதா மெல்லக் கண்ணைத் திறந்தாள். அவள் முகத்தில் அதிர்ச்சியும் கண்களின் பீதியும் அவனை என்னவோ செய்தன.

''நீங்கள்.... நீங்கள்...'' என்று அவன் நெஞ்சில் சாய்ந்து கேவினாள் அவள்.

''அழாதே, சீதா! அப்பா பேசியதை முழுக்கக் கேட்டேன் நான். முழுக்கக் கேட்கணும்னுதான் மறைஞ்சு நின்னேன். உன்னை வார்த்தைகளாலேயே சுட்டுட்டார். எனக்காக அவரை மன்னிச்சுடு.''

சீதா எழுந்து உட்கார்ந்தாள்.

சுவர்க் காலண்டரில் சிரித்த குழந்தையைக் கண்டு பெருமூச்செறிந்தாள் அவள்.

''என்ன சீதா! மற்றவர்கள் ஏதாவது சொல்லிவிட்டுப் போகட்டுமே ? இதைக் குறையாகவே நாம் பாவிக்க வேண்டாம்!''

அன்பின் விகசிப்பை மழலை ரூபத்தில் பெறாத ஏக்கம் மிகுந்த நெஞ்சங்கள் இரண்டும் ஒன்றை ஒன்று திருப்தியோடு தழுவிக் கொண்டன.

''நமது இந்தத் துயரத்தைச் சலுகையாக்கிக் கொண்டு நம் அன்பை உடைக்க யார் வந்தாலும் நான் அனுமதிக்கமாட்டேன்.... காலன் பிரிக்கிற வரை இந்த அன்புப் பாதுகாப்பு நிச்சயம்கிற பலம் நமக்குப் போதும், சீதா!''

அந்த அன்பில் தன் குறைகளையெல்லாம் கரைக்கத் தயாரானாள் அவள்.

## உங்களுடைய
## தந்திச் செய்திகள் விரைவில்
## போய்ச்சேர உதவுங்கள்



தந்தி என்றாலே அவசரம்தான்.
உங்களுடைய தந்திச் செய்திகளை விரைவில்
பட்டுவாடா செய்ய நாங்கள் எங்களால்
முடிந்தது அனைத்தையும் செய்கிறோம்.

தந்தியில் விலாசம் முழுமையாக இருந்தால்,
விரைவாகப் பட்டுவாடா செய்ய அது
எங்களுக்கு உதவும். ஆகவே தயவுசெய்து
விலாசத்தை முழுமையாக எழுதுங்கள்.
தவிர, செய்தி போய்ச் சேரவேண்டிய
நகரத்தை எழுதியவுடன், விலாசத்தி
னுடைய பின்கோட் எண்ணின் கடைசி
மூன்று எண்களையும் குறிப்பிடுங்கள்.
ஏனெனில் சில நகரங்களில் ஒன்றுக்கு
மேற்பட்ட தந்தி பட்டுவாடா நிலையங்கள்
உண்டு. பின்கோடின் அந்த மூன்று
எண்கள் தந்தியை உரிய விலாசத்திற்கு
விரைவில் அனுப்ப உதவியாக இருக்கும்.

**தபால் தந்திப் பிரிவு**

davp 73/665

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# இப்பொழுது! யுகோபாங்க் உங்கள் டிபாஸிட்டுகளை கிட்டத்தட்ட **மும்மடங்கு** ஆக்குகின்றது




## நீங்கள் யுகோபாங்க் டிபாஸிட் ஸர்டிபிகேட் திட்டத்தில் பணம் போட்டு வைத்தால்!

இத்திட்டப்படி ரூ. 5000 டிபாஸிட் செய்கிறீர்கள் என்றால், அத்தொகை சரியாக 15 ஆண்டுகளில் கிட்டத்தட்ட மூன்று மடங்கான ரூ. 15,000 ஆகப் பெருகிவிடுகிறது நீங்கள் முதலில் போட்ட பணத்திற்கு இது எவ்வளவு கணிசமான தொகை! இத்திட்டம், குறைந்த தொகை ரூ 100 லிருந்து தொடங்கி அதற்கு மேல் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போகலாம்.

தாங்களே தங்களுக்கு உதவ
மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது




# யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC-20TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)

# ஆடவர்களே! உங்கள் மனதைக் கவர வருகிறது

## ஐரோப்பா முழுவதும் பிரபலமான

## விமல் தரும் டெக்ஸ்லீன்

100% டெக்ஸ்சரைஸ்டு பாலியெஸ்டர் சூட்டிங்குகள்
இதை அணிவதால் நீங்கள் எடுப்பாக விளங்குவீர்கள்.
டெக்ஸ்லீன் ஊவன் மற்றும் நிட்டெட் ஸ்ட்ரெச்
சூட்டிங்குகள் எங்கும் எப்போதும் அணியச்
சிறந்தவை—டெக்ஸ்லீன் எடுப்பான
தோற்றத்துக்கும் தனிச் சிறப்புக்கும் சின்னம்.
விமல், இணையற்ற புடவைகள், ஷர்ட்டிங்
மற்றும் உடுப்புத் துணிகளையும் வழங்குகின்றனர்

எப்போதும் கவர்ச்சியான துணிகளுக்காக...




100% டெக்ஸ்சரைஸ்டு
பாலியெஸ்டர் சூட்டிங்குகள்
ஊவன் மற்றும் நிட்டெட்
(ஸ்ட்ரெச்)

Vimal is registered trademark of
Reliance Textile Industries
Pvt. Ltd. Ahmedabad